# பயங்கரப் படுகொலை!


விலை 3 அணா Phone: 85777

# ஜனசக்தி

(கம்யூனிஸ்ட் கட்சி வார இதழ்)

மலர் 9] ஞாயிறு 19—7—53 [இதழ் 32


## காங்கிரஸ் ரத்தவெறிக்கு 11 பேர் பலி

## எதிர்க் கட்சிகளின் கண்டனமுழக்கம்

**ஆச்சாரியாரின் மிருகத்தனமான அடக்குமுறை கட்டவிழ்த்து விடப்பட்டுள்ளது. எதிர்க்கட்சியினருக்கு எவ்விதப் பிரஜாஉரிமையுமில்லை, துப்பாக்கி ஒன்றே தங்களது ஆட்சியின் துணைவன் என்பதை ஆச்சாரியார் ஆட்சி தூத்துக்குடி, டால்மியாபுரத் துப்பாக்கி பிரயோகங்கள்மூலம் நிரூபித்துவிட்டது.**

ஆச்சாரியாரின் எதேச்சாதிகாரக் கல்வித் திட்டத்தையும், பண்டித நேருவும் மற்ற காங்கிரஸ் தலைவர்களும் எதிர்கட்சிகள் நடத்தும் இயக்கங்களை கேவலமான விதத்தில் பேசுவதை எதிர்த்தும், போராட வந்தவர்களின்மேல் மிருகத் தனமான அடக்குமுறையை, போலீஸ் வெறியை, பயங்கரத் தாக்குதலைக் கட்டவிழ்த்து விட்டு, குற்றமற்ற நிரபராதிகளை கொன்று குவித்துள்ளது காங்கிரஸ் பேயாட்சி. பாஸிஸ்டு நரவெறியர்களும் செய்யத் துணியாத கொடுமைகள் புரிய முன் வந்துவிட்டது ராஜகோபாலாச்சாரியார் ஆட்சி.



தூத்துக்குடிக்கு அருகில் ரயில் வண்டியை நிறுத்தியதற்காக, அமைதியாக சத்தியாக்கிரஹம் செய்ததற்காக 25 தடவை இரண்டு இடங்களில் சுட்டதாக முதல் மந்திரி வெட்கமின்றி சட்ட சபையில் அறிவித்தார். இதனால் நால்வர் கொல்லப்பட்டனர். 25 பேர் படுகாயமடைந்தனர். அதே போல் டால்மியா புரத்திலும் அந்தப் பெயரை மாற்றவேண்டுமென்று கோரி ரயிலை நிறுத்தி சத்தியாக்கிரஹம் செய்தனர் தி.மு.க. வைச் சேர்ந்தவர்கள். ரயிலை நிறுத்தி சத்தியாக்கிரஹம் செய்தவர்களின்மேல் பொய்க் காரணங்கூறி மூர்க்கதனமாகத் துப்பாக்கிப்பிரயோகஞ் செய்துள்ளது ஆச்சாரியார் போலீஸ். ஐவர் அந்த இடத்திலேயே கொல்லப்பட்டனர். 35 பேர் படுகாயமடைந்தனர். இதுவரை ஆயிரத்திற்கு மேற்பட்டோர் கைதுசெய்யப்பட்டு சிறைக்குள் தள்ளப்ளப்பட்டனர்.

### தூங்கிக்கொண்டிருந்த வியாபாரி சுடப்பட்டார்

அமைதிக்குப் பங்கம் வந்துவிட்டதாக அங்கலாய்க்கிறார் ஆச்சாரியார். சாத்வீகத்தில் சமாதானத்தில், அமைதியில், நம்பிக்கையுள்ள ஆட்சி என்பது இதுதானும்! சாத்வீகத்தைப்பற்றியும் அமைதியைப் பற்றியும் பேச அருகதை அற்றவர்களின் நரவெறியர்களின் வார்த்தைகள் அவை. இன்றேல் டால்மியாபுரத்தில் ரயிலில் பிரயாணஞ் செய்துகொண்டிருந்த, குற்றமற்ற நிரபராதிகளைக் கொன்று குவிக்க முன்வந்திருக்குமா? அங்குக் கொல்லப்பட்டவர்களில் ரெயிலில் தூங்கிக்கொண்டிருந்த ஒரு நூல் வியாபாரியும் ஒருவர்.

இந்த அக்கிரமம் நாஜி ஆட்சியில்தான் நடந்தது. அந்தக் கொடுங்கோலர்கள் இன்று எங்கே சென்று மறைந்தனர் என்பதை மறந்துவிட்டது ஆச்சாரியார் ஆட்சி.

இவ்வித அக்கிரமச் செயலைக் கண்டனஞ் செய்ய, பகிரங்க பொதுஜன விசாரணைக் கோர இன்று (16-7-53) எதிர்க் கட்சித் தலைவர் தோழர் பி. ராமமூர்த்தியும்மற்றும் பலரும் சட்டசபையில் ஒத்திவைப்புப் பிரேரபணையைக் கொண்டு வந்தனர். ராஜகோபாலாச்சாரியாரின் போலீஸ் மூர்க்கத்தனமாக மக்கள்மீது பாய்ந்து மக்களின் ரத்தத்தைக் குடித்துள்ளதைக் கண்டித்து இதை விவாதிக்க சபையின் மற்ற விவகாரங்கள் ஒத்திவைக்க வேண்டுமென்று கோரினர்

முதல் மந்திரி இரண்டு இடங்களிலும் போலீஸ் சுட்டதைப் பற்றிய விபரங்களை கொடுத்துவிட்டு, தான் இந்த சம்பவங்களைப் பற்றி விசாரணை செய்ய ஜில்லா மாஜிஸ்டிரேட் இருவரையும், ஜில்லா ஜட்ஜுகள் இருவரையும் இரண்டு இடத்திற்கும் நியமித்திருப்பதாகவும், நிலமையை இவர்கள் பரிபூரணமாக விசாரித்து நியாயம் வழங்கிவிடுவார்களென்றும் பதில் கூறி பிரச்சினையை தட்டிக்கழித்துவிடலாம் என்று நினைத்தார்.

### கண்துடைப்பு விசாரணை வேண்டாம்

தோழர் ராமமூர்த்தி ஜில்லா மாஜிஸ்டிரேட்டுகளைப் பற்றி இந்த நாட்டு மக்களுக்கு நன்கு தெரியுமென்றும், தங்கள் குற்றத்தை மூடி மறைக்கும் சூழ்ச்சி இதுவென்றும் எடுத்துக்காட்டி, இந்த ராஜ்யத்தின் மக்கள் பிரதிநிதிகளைக் கொண்டு சர்க்கார் சார்பற்றவர்களைக் கொண்டு விசாரணை நடத்தி, கொலைக்குக் காரணமானவர்களை தண்டிக்கவேண்டிய

(2-ம் பக்கம் பார்க்க)

## கல்கத்தாவில் பிரம்மாண்டமான ஹர்த்தால்!

### ஜுலை 15ல்

### 15 லட்சம் தொழிலாளிகள் வேலைநிறுத்தம்!

### பொதுக்கூட்டத்தில் 5 லட்சம் பேர்!

டிராம் கட்டண உயர்வை எதிர்த்து ஜுலை 15ந் தேதியன்று, கல்கத்தாவின் சரித்திரத்திலேயே கண்டிராத மிகவும் பிரம்மாண்டமான ஒரு ஹர்த்தால் நடைபெற்றது. பஞ்சாலை, சணல், இன்ஜினீயரிங் தொழில்களிலுள்ள அத்தனை—15 லட்சம் தொழிலாளிகளும் வேலைநிறுத்தம் செய்தனர்.

அன்று மாலை பொதுக்கூட்டத்தில் 5 லட்சம் பேர் திரண்டனர்.

ஜனவிரோதிகள் நடுங்கினர். ஜனநாயக சக்திகள் போர்க்கொடி உயர்த்திவிட்டது.

## துப்பாக்கிப் பிரயோகத்திற்கு சென்னையில் கண்டனம்

துப்பாக்கிப் பிரயோகங்களைக் கண்டித்து, சென்னை பென்ஷனர் லேன் மைதானத்தில் நேற்று மாலை தோழர் கே. முருகேசன் தலைமையில் 8000பேர் கொண்ட பொதுக் கூட்டம் நடைபெற்றது.

தோழர்கள் ஜி. ஜான், கே. டி. கே. தங்கமணி, கன்னியப்பன், எம். சி., கே. டி. ராஜு, எம். எல். ஏ., ரத்தினம், எம்.எல்.ஏ., ஆகியோர் ராஜாஜி சர்க்கார் கையாண்டு வரும் கண்மூடித்தனமான அடக்குமுறையை கண்டித்துப் பேசினர்.

கைது செய்யப்பட்ட 1500 தி. க., தி. மு. க. தொர்கள், பொது மக்கள் அனைவரையும் விடுவிக்கக் கோரியும், தூத்துக்குடி, டால்மியாபுரத்தில் போலீசார் மிலேச்சத்தனமாகத் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததைக் கண்டித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

தியாகிகளுக்கு வணக்கம் செலுத்தும் முறையில் கூட்டத்தினர் அனைவரும் சில நிமிஷங்கள் எழுந்து நின்றனர்.

## இம் என்றால் தடியடி! ஏன் என்றால் சிறை!!

## காங்கிரஸ் ஆட்சியின் பேயாட்டம்



**சென்னை ராஜ்ய மக்களின் அபிப்ராயத்தைக் கேளாமல், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபையின் அனுமதியையும் பெறாமல், பல்வேறு கட்சிகளும், ஆளும் வர்க்கக் கட்சியின் தலைவரும் 'ஹிந்து' போன்ற அவர்களது இதழ்களும் வன்மையாக எதிர்ப்பதையும் பாராமல், லட்சோப லட்சக் கணக்கான மக்களது எதிர்ப்பையும் மதியாமல், கொல்லைப்புறமாக பதவியைப் பிடித்த ஆச்சாரியாரின் மைனாரிடி ஆட்சி தனது மக்கள் விரோத கல்வித் திட்டத்தை பானங்கெட்ட விதத்தில் போலீஸ் துப்பாக்கி முனையில் அமுல்நடத்த முன் வந்துவிட்டது.**

பிள்ளைகளை தெருச் சுத்திகளாக உருப்படாமல் போகச்செய்யும் திட்டத்தை, உபாத்தியாயர்களிடம் அடிமை வேலை வாங்கும் திட்டத்தை எதிர்த்து தமிழ்நாடெங்கும் கம்யூனிஸ்ட கட்சி, திராவிடக் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம் அமைதியாக ஆர்ப்பாட்டங்களும், ஊர்வலங்களும், வெகுஜனக் கையெழுத்தியக்கமும் நடத்தி வருகின்றனர். ஆச்சாரியார் ஆட்சிக்கு இதுவரை கண்டிராத விதத்தில் எதிர்ப்பு வளர்ந்து வருவதைக் கண்டு நடுநடுங்கி முடிவில் வகையற்ற ஆளுங்கூட்டம் போலீஸிடம் அடைக்கலம் புகுந்துள்ளது.

### தி. க., தி. மு. க. தலைவர்கள் மேல் தாக்குதல்

அமைதியாக சட்ட சபை முன்பும், முதல் மந்திரி வீட்டு முன்பும் ஆர்ப்பாட்டம் செய்யவிருந்த தி. மு. க. தலைவர்களான தோழர்கள் அண்ணாத்துரை, நெடுஞ்செழியன், மதியழகன், நடராசன் ஆகியோரையும், சட்ட சபை முன்பு தங்களது எதிர்ப்பைத் தெரிவிக்க வந்த திராவிடக் கழகத் தலைவர்களான தோழர்கள் எஸ். குருசாமி, வீராசாமி, எம்.பி., எம், கே. டி. சுப்பிரமணியம் ஆகிய பலரும் கைது செய்யப்பட்டனர். ஆச்சாரியார் வீட்டு முன்பு எதிர்ப்புக்கோஷங்களைக் கிளப்பிய திருமதி. சத்தியவாணி முத்து போன்ற பலரும் கைது செய்யப்பட்டுள்ளனர். அன்றைய தினம் மாலைவரை தி.க., தி.மு.க. வைச் சேர்ந்த 129 தோழர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

மறுநாள் தங்களது எதிர்ப்பைத் தெரிவிப்பதற்காக ஆலோசனை செய்துகொண்டிருந்த தி. மு. க. தலைவர்களை வாரண்டில்லாமல் எவ்விதக் குற்றச்சாட்டும் இல்லாமல் கைது செய்து விசாரணையின்றிப் பாதுகாப்பில் வைத்துள்ளது ஆச்சாரியாரின் போலீஸ் ஆட்சி.

### சட்டவிரோதச் செய்கை

ஆச்சாரியாரின் திட்டத்தை எதிர்க்க வந்தவர்களை சட்டவிரோதமாகக் கைது செய்ததைப் பற்றியும், சட்டசபையைக் கலக்காமல் இந்தப் படுமோசமான கல்வித் திட்டத்தை அமுல் நடத்துவதைப் பற்றி உடனடி விவாதஞ் செய்ய சென்னை சட்ட சபையின் அலுவல்களை ஒத்திவைக்க எதிர் கட்சியின் தலைவர் தோழர் ராமமூர்த்தி, திருவாளர்கள் ஏ. கோவிந்தசாமி பி. ரங்கசாமி, எஸ். தெய்வசிகாமணி, வி. கோபால கவுண்டர், ஆகியோர் கொடுத்த ஒத்திவைப்பு பிரேரபணைகளை விவாதிக்க வேண்டுமென்றும் கோரினர். ஆனால் சபாநாயகர் கைதுசெய்வது சாதாரண சர்க்கார் வேலையென்றும், அது அவசரப் பிரேரபணைக்குரிய பிரச்சனை அல்லவென்றும் பதிலளித்தார். கைது செய்யப்பட்டவிதத்தை எதிர்த்து திரு. ஏ. கோவிந்தசாமி பேசியபின் பொதுஜன முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சனைஎன்று உடனடியாக இதைக் கவனத்திற்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் வற்புறுத்தினர். இதை திரு. எஸ். தெய்வசிகாமணி, ரங்கசாமி ரெட்டியார், ஆகியோர் ஆதரித்தனர். சபாநாயகர் கைதுசெய்யப்பட்டவர்களை விடுதலை செய்ய வேண்டுமானால் கோர்ட்டிற்கு சென்று வாதாடுங்கள் என்றுகூறி எதிர்தரப்பின் வாதத்தை ஏற்க மறுக்கவே மீண்டும் தோழர் ராமமூர்த்தி எழுந்து கைதுசெய்யப்பட்டவர்களை விடுதலை செய்ய கோர்ட்டிற்குப் போக எங்களுக்குத் தெரியும். அதுவல்ல இங்குள்ள பிரச்சனை. நம் முன் உள்ளது வெகுஜன அமைதியைக் குலைக்கும் சர்க்காரின் நடத்தை. மக்களின் ஆத்திரத்தை தூண்டும் அந்த நடத்தை சமாதானத்தை நிலைநாட்டுவதாகச் சொல்லிக் கொள்கிறார்களே அந்த சமாதானத்திற்குப் பங்கம் விளைவிக்கும் சர்க்காரின் நடத்தை. அதைத்ததான் அவசரமாக இந்த சபை விவாதிக்கவேண்டிய அவசியமாகிறது'' என்றார்.

### எம்.எல்.ஏக்கள் வெளியேற்றம்

இந்த வாதத்தையும் சபாநாயகர் ஏற்க மறுத்து, கைது செய்யப்பட்டதை விவாதிக்கும் ஒத்திவைப்பு பிரேரபணையை நிராகரித்துவிட்டு சர்க்காரின் கல்வித் திட்டத்தைப்பற்றி விவாதிக்க தோழர் ராமமூர்த்தி கொண்டு வந்த மற்றொரு ஒத்திவைப்புத் தீர்மானத்தை மறுநாள் தான் கவனிப்பதாக சபாநாயகர் கூறினர்.

இரண்டு தீர்மானங்களும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளதாகையாலும், சர்க்காரின் ஜனநாயக விரோதச் செயலை தாம் வன்மையாகக் கண்டிப்பதற்கு அடையாளமாக எதிர்கட்சியின் தலைவர் தோழர் ராமமூர்த்தியின் தலைமையில் 100க்கு மேற்பட்ட எம்.எல்.ஏ.க்கள் சபையிலிருந்து வெளியேறினர். இந்தக் கண்டன வெளியேற்றத்தில் கம்யூனிஸ்டுக் கட்சி, உழைப்பாளர் கட்சி, ஐ. மு. சுயேச்சை எம்.எல்.ஏ.க்கள் தனிப்பட்ட சுயேச்சை எம்.எல். ஏ.க்கள், ஒருசில சோஷியலிஸ்டுகள் ஆகியோர் கலந்துகொண்டனர். எதிர்தரப்பு ஸ்தானங்களெல்லாம் காலியாயின. ஆச்சாரியாரின் மக்கள் விரோதக் கல்விக் கொள்கைக்கும், அடக்குமுறை ஆட்சிக்கும் எதிராக சட்டசபை ஜனநாயக கட்சிகள் அனைத்தும் ஒன்றுபட்டு நின்று ஆர்பாட்டஞ் செய்து கண்டனத்தை எழுப்பினர்.

# ஜனசக்தி

ஞாயிற்றுக்கிழமை 19—7—'53


## அக்கிரமம்! அநியாயம்!!

தூத்துக்குடியிலும், டால்மியாபுரத்திலும் படுகொலை! பலருக்குப் படுகாயம்! ஆயிரத்திற்கு மேற்பட்டோர் இதுவரை சிறைக்குள் அடைக்கப்பட்டுள்ளனர்!

காங்கிரஸ் ஆட்சியில் மக்களுடைய உயிர் துரும்புக்குச் சமானமாக மதிக்கப்படுகிறது என்பதையே இந்த பயங்கரப் படுகொலை அறுதியிட்டு வலியுறுத்துகிறது. போலீஸாரின் மிருகத்தனமான துப்பாக்கிப் பிரயோகத்தால் நிராயுதபாணிகளான மக்களில் 11 பேர்கள் கொலை செய்யப்பட்டுள்ளனர். இந்த அடக்குமுறை அட்டகாசத்தைக் கண்டிக்க எந்தக் கடுமையான வார்த்தைகளை உபயோகித்தாலும் தகும்.

டால்மியாபுரப் பெயரை மாற்றுவதுபற்றியும், தி. க., தி.மு.க. வைத்துள்ள பலகோஷங்கள்பற்றியும் கம்யூனிஸ்டு கட்சி தனது அபிப்பிராயத்தை ஏற்கனவேயே தெரிவித்துள்ளது. ஆச்சாரியாரின் புதிய கல்வித் திட்டத்தை எவ்விதம் சகல ஜனநாயகக் கட்சிகளும் ஒன்றுபட்டு எதிர்ப்பதின் மூலமே முறியடிக்க முடியும் என்பதையும் வலியுறுத்தி வருகிறது.

எனினும், இன்று ஆரம்பிக்கப் பட்டுள்ள அடக்குமுறைப் பேயாட்டத்திற்கு முடிவுகட்டி கைது செய்யப்பட்ட தி.க., தி.மு.க. தலைவர்களை விடுதலை செய்ய சகல ஜனநாயக சக்திகளையும் ஒன்று திரட்ட கம்யூனிஸ்டுக் கட்சி முன் வருகிறது. சட்டசபையில் தோழர் ராமமூர்த்தி எடுத்த நடவடிக்கைகள் அதன் முதல்படியே.

உணவு இல்லாமை, வேலை இல்லாத் திண்டாட்டம் ஆகியவை காரணமாக அவதிப்பட்டு அல்லற்படும் லட்சோபலட்சக் கணக்கான மக்களுடைய பிரச்சனைகளை தீர்க்காமல் சர்க்கார் இந்த விதமான அடக்குமுறை வழிகளை மேற்கொள்ளுகிறது.

மக்களுடைய பெருவாரியான அபிப்பிராயத்தை மதிக்காமல், சட்டசபையையும் கலந்துகொள்ளாமல் புதிய கல்வித் திட்டத்தை அமுல் நடத்த முன்வந்துள்ளது ஆச்சாரியார் ஆட்சி. அதுமட்டுமா? சென்னையில் 2,000 தொழிலாளர்கள். லட்சக்கணக்கான பிரயாணிகள் ஆகியோரின் நலன்களை மதியாமல் கம்பெனியை மூடிய புருக்ஸ் என்ற வெள்ளை முதலாளியின்மேல் ஆச்சாரியார் போலீஸ் பாயவில்லை. அவனுக்கு மெய்க்காவலனாகவும், அவனது பாதந்தாங்கியாகவும் விளங்கும் ஆச்சாரியாரின் போலீஸ் ஆட்சி, நிராயுதபாணிகளான மக்களைச் சுட்டுக்கொன்று சவக்காடாக்கியுள்ளது.

நம் தேச மக்களின் போராட்டங்களை ரத்தவெள்ளத்தில் ஆழ்த்தி வெள்ளை முதலாளிகளுக்கும் நிலப்பிரபுத்துவக் கோட்டான்களுக்கும் பாதுகாப்பு அளித்துவரும் இந்தப் போலீஸ் ஆட்சியின் அந்திமக்காலம் சீக்கிரமே நெருங்கிவிட்டது. சர்க்கார் தன்முன்னுல்உள்ள பிரச்னைகளை தடியடி, சிறைக்கூடம், துப்பாக்கிப்பிரயோகம் முதலியவைகளால் தீர்க்கப்பார்க்கிறது. இதைத்தான் நேற்றைய சம்பவங்கள் வலியுறுத்திக் காட்டுகின்றன.

இந்த அடக்குமுறைக் கொடுங்கோலாட்சி நீடிக்கமுடியாது. ஒன்றுபட்டு மதர்ந்து கிளர்ந்தெழும் மக்களின் கோபக்கனலில் இரையாகப்போகிறது என்பது நிச்சயம்.

இன்று இந்தத் திட்டத்தை முறியடிக்க எழுந்துள்ள சகல சக்திகளும் ஒன்றுபடவேண்டும். ஆச்சாரியாருக்கு உள்ள பலம் இந்த எதிர்ப்பு சக்திகளிடையே ஒற்றுமை இல்லாததுதான். ஜனநாயக சக்திகளின் இந்த பலஹீனத்தை உடனடியாகப் போக்கியாக வேண்டும். சட்டசபைக்குள்ளும் வெளியேயும் இன்று வளர்ந்துவரும் எதிர்ப்பு நடவடிக்கைகளை உடனடியாக ஒன்றுபடுத்தியாக வேண்டும்.

மிருகத்தனமான இந்தத் துப்பாக்கிப் பிரயோகங்களை அரசியல் வித்தியாசம் பாராமல் சகல கட்சிகளும் ஒன்றுபட்டுக் கண்டனம் செய்ய முன்வரவேண்டுகிறோம். சர்வ கட்சிக் கூட்டங்கள் நடத்தி இதுசம்பந்தமாக சர்க்கார் சார்பற்றவர்களைக்கொண்டு விசாரணை நடத்தும்படி கோரவேண்டும். சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு தகுந்த தண்டனை அளிக்கவேண்டுமென்றும் கோரவேண்டும். உயிரிழந்தவரின் குடும்பங்களுக்கு நஷ்டஈடு தரக் கோரவேண்டும்.

புதிய கல்வித் திட்டத்தை முறியடிக்கவும் இதுவரை கைது செய்யப்பட்ட அனைவரையும் விடுதலை செய்யவும் ஒன்றுபட்ட கிளர்ச்சி தமிழ் நாடெங்கணும் புயல் வேகத்தில் பரவச்செய்ய அனைவரையும் அறைகூவி அழைக்கின்றோம்.

## நிதி வசூல் வேகத்தை துரிதப்படுத்துக!

சென்றவார "ஜனசக்தி"யில் தமிழ்நாடு மாகாணக் கமிட்டி, (இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி) ஜூலை 25-ந் தேதிக்குள் ரூ. 5000 அவசரமாகத் தேவை என்று வேண்டுகோள்விட்டிருந்தது உங்களுக்குத் தெரியும்.

கம்யூனிஸ்ட் கட்சியின் இந்த அபயக்குரலைக் கேட்டதும் உடனே பல தோழர்கள், வாசகர்கள் ஆர்வத்துடன் தங்களால் முடிந்ததை அனுப்பி வைத்துள்ளார்கள். இந்தத் தோழர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றி உரித்தாகுக! ஆனால் இந்த வேகம் போதாது.

அவர்களைப் பின்பற்றி மற்றவர்களும் உடனே செயலில் இறங்குங்கள். வசூல்வேகத்தை துரிதப்படுத்துங்கள். நீங்கள் மனது வைத்தால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை.

மா. கமிட்டி

## வாரக் குறிப்புகள்

## புருக்ஸிற்கு தொண்டுசெய்யும் காங்கிரஸ் சர்க்கார்

தோழர்கள் **பி. ராமமூர்த்தி. எம். கல்யாணசுந்தரம்,** ஆகிய இருவரும் அவசர அவசியமாக உள்ள டிராம்வேப் பிரச்னையைப் பற்றி விவாதிக்க நேரம் தரவேண்டுமென்று நேற்று (15-7-53) சபாநாயகரைக் கேட்டனர். இந்தக் கோரிக்கையை சபாநாயகர் ஏற்று மாலையில் விவாதமும் நடந்தது

இந்த விவாதம் நடப்பதற்கு முன்பே நேற்று காலையில் டிராம்வே தொழிலாளர் பற்றி தோழர் கல்யாணசுந்தரம் கேட்ட கேள்விக்குப் பதிலளிக்கையில் தொழிலாளர் மந்திரி சர்க்காரின் கையாலாகாத போக்கை வெளிப்படுத்தினுர். டிராம்களை நடத்த சர்க்காருக்கு வக்கில்லை, வழியில்லை எனக் சொல்லி மாரடித்துக்கொண்டார்

இந்தப் போக்கை எதிர்த்து கம்யூனிஸ்ட் கட்சி எம்.எல்.ஏ.க்கள் மட்டுமல்ல காங்கிரஸ் பிரஜா சோஷியலிஸ்டு முதலிய சகல கட்சிகளையும் சேர்ந்த எம் எல் ஏ.க்கள் தங்கள் கண்டனக் குரலை எழுப்பினர் இவ்விதம் இப் பிரச்சினை, அதாவது 1600 தொழிலாளருக்கு உடனடியாக வேலை கொடுப்பது, ஏழை எளிய மக்களுக்கு உதவிய டிராம்களை உடனடியாக சர்க்கார் எடுத்து நடத்த வேண்டுமென்ற பிரச்சினை சகலரின் கவனத்தைக் கவர்ந்ததாலேயே சபாநாயகர் இதைப்பற்றி விவாதிக்க $\frac{1}{2}$ மணி நேரம் தந்தார்

ஆனல் மாலை விவாதத்தின் போது நடந்ததென்ன? முதல் மந்திரி இதைப்பற்றி பேசவே இல்லை. தோழர்கள் ராமமூர்த்தி கல்யாண சுந்தரம் ஆகிய இருவரும் சர்க்காரே உடனடியாக டிராம்களை எடுத்து நடத்த முடியும், நடத்தவேண்டும், அவைகளை லாபகரமாக நடத்த முடியுமென்பதை நிரூபிக்க முடியும், சர்க்கார் இன்று வெள்ளை முதலாளிமுன் தொடை நடுங்கும் கொள்கையைக் கைவிட்டால் தொழிலாளர் ஒத்துழைப்புடன் இதைச் செய்ய முடியுமென்று வற்புறுத்தினர். டிராம்வே விவகாரங்களை பரிசீலனை செய்ய சர்க்கார், சட்டசபை, டிராம்வே யூனியன்கள் ஆகியோரின் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு கமிட்டியையும் நியமிக்கவேண்டுமென்றனர்.

நடைமுறையில் சாத்தியமான, துல்லியமான இந்த ஆலோசனைகளை ஏற்க மறுத்தது, வெள்ளை முதலாளிக்கு தொண்டு செய்வதே அவனுக்கு மெய்க் காப்பாளர்களாக இருப்பதே, தங்களது கடமை என்று நினைக்கும் சென்னை சர்க்கார். மக்களுக்கு உடனடித் தேவையான டிராம்களை ஓட்டுவதில்,தொழிலாளர்களுக்கு நல்வாழ்வளிப்பதில் ஏன்? சற்றும் அக்கரை அக்கறை காட்டவில்லை.

அதனுல் தான் விசித்திரமான ஆலோசனையை நேற்று சட்டசபை முன்பு வைத்தனர். அதாவது கல்கத்தா டிராம்வேக் கம்பெனியைப்போல் சென்னை டிராம்வேக் கம்பெனியை சென்னை சர்க்காரின் சார்பில் அதே முதலாளி புருக்ஸைக் கொண்டு நடத்தச் செய்வது. அவர் சர்க்காரின் அல்லது கார்ப்பரேஷனின் கார்டியனாக விளங்கப் போகிறாராம். அதன் அர்த்தம் என்ன?

500 தொழிலாளிகளை வேலையிலிருந்து நீக்குவது அமுலாக்கப்படும்! அவன் இன்னும் என்னென்ன நிபந்தனைகள் போடுகிறானே அத்தனையும் சர்க்காரால் அங்கீகரிக்கப்படும். இதுதான் ஆச்சாரியாரின் புதிய டிராம்வே திட்டம்.

இவை அனைத்தும் ஒன்றை மேலும் மேலும் திட்டவட்டமாகக் தெளிவாக்குகிறது டிராம்களை ஓட்ட, சகல தொழிலாளர்களுக்கும் வேலை கிடைக்கச் செய்ய தொடர்ந்து பொது மக்களும் தொழிலாளர்களும் தீவிரமாகப் போராடினுலொழிய ஆச்சாரியார் ஆட்சியைம் பணியவைக்க முடியாதென்பது தெட்டத் தெளிவாகிறது

—நே எம்
16—7—53.

(முதற்பக்கத் தொடர்ச்சி)

பிரச்சனையாதலால் முதல் மந்திரியின் கூற்றை ஏற்க மறுத்தார்.

அவ்விதப் பகிரங்கப் பொது ஜனவிசாரணையை அனுமதிப்பது சர்க்காரின் பொறுப்பை பிறரிடத்தில் விட்டுவிடுவதாகு மென்றும் தகுந்த சமயத்தில் தகுந்த நடவடிக்கை எடுக்க முன்வரும் அதிகாரிகளை குழப்பத்திற்குள்ளாக்குமென்றும் கூறி அதிகாரிகளின் மக்கள் விரோதச்செயல்களுக்குத் திரையிட நினைத்தார் முதல் மந்திரி. இந்தப் போக்கை வன்மையாகக் கண்டித்து தனது ஒத்திவைப்புப் பிரரேபணை சபாநாயகர் ஏற்க வேண்டுமென்று தோழர் ராமமூர்த்தி கோரினுர். முதல் மந்திரி எதிர்த்தபோதிலும் ராமமூர்த்தியின் தீர்மானத்தை சபாநாயகர் ஏற்ருர். ஆச்சாரியாரின் அடக்குமுறைக் கொள்கை இதன் மூலம் மேலும் அம்பலப்படுத்தப்பட்டது.

## ரூ. 50,000 விசேஷ நிதி

| | | | |
|---|---|---|---|
| முன் வசூல் ரூ. | 218 | 0 | 0 |
| **சென்னை** | | | |
| தோழர் டி. ஆர். கணேசன்மூலம் | 15 | 0 | 0 |
| ஜி. நாகரத்னம் | 1 | 0 | 0 |
| பவுரிலால் | 10 | 0 | 0 |
| ஏ. பி. பிரஸ் தோழர்கள் | 10 | 0 | 0 |
| சர்க்கார் பிரஸ் தோழர்கள் | 10 | 0 | 0 |
| **நாமக்கல்** | | | |
| பழனியப்பன் மூலம் ஆசிரியர் ரூ. 5; டாக்டர் ஏ. மாணிக்கம் ரூ. 1; என். எஸ். பழனியப்பன் ரூ. 1; ரங்கசாமி அணு 4 | 7 | 4 | 0 |
| **பர்பாய்** | | | |
| எஸ். குப்புசாமி | 5 | 0 | 0 |
| **திருவிடைமருதூர்** | | | |
| பி. எஸ். கண்ணுசாமி, சி. துரைசாமி தலைக்கு ரூ. 1 | 2 | 0 | 0 |
| **காரைக்கால்** | | | |
| எம். ஜம்புலிங்கம்மூலம் | 15 | 0 | 0 |
| **கும்பகோணம்** | | | |
| ஆர். சத்தியபாமா | 5 | 0 | 0 |
| **காவேரிநகர்** | | | |
| என். நாராயண நாயர், பி. பழனிச்சாமி | 2 | 0 | 0 |
| 17-7-53 முடிய ஆ. ரூ. | 295 | 13 | 0 |

## விருதுநகர் தொகுதியில் காங்கிரஸ்காரர்கள் காலித்தனம்

விருதுநகர் தொகுதியில் சேர்ந்த சங்கரலிங்கபுரம் கிராமத்தில் 13-7-53ல் ஐக்கியமுன்னணி அபேட்சகர் உலகநாதனை ஆதரிக்கும்பொருட்டு, சாத்தூர் பிச்சைக்குட்டி கோஷ்டியாரால் வில்லுப்பாட்டு கலாநிகழ்ச்சி நடந்தது.

காங்கிரஸ் ஆட்சியில் பட்டினிச் சாவுகள் ஏற்பட்டுவருவதைப்பற்றியும், நிலப்பிரபுக்களின் கொடுமைகளைப்பற்றியும் கல்லும் உருகும் வண்ணம் கலைஞர் பிச்சைக்குட்டி எடுத்துரைத்தார்.

ஸ்தல காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி உத்தானு மல்லையாவுக்கும் அவருடன் சேர்ந்த 6 காங்கிரஸ்காரர்களுக்கும் ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது. "பட்டினிச் சாவு இல்லை" என்று கூச்சலிட்டுக் கொண்டே கூட்டத்தினர்மீது மண்ணை வாரியிறைத்தார்கள். சாணி உருண்டைகளைக் கூட்டத்தின்மீது எறிந்தார்கள். தகரத்தைத் தட்டி ஓசையெழுப்பிக் கலாட்டா செய்தார்கள்.

இவ்வளவு செய்தும் மக்களின் பொறுமையும், கட்டுப்பாடும் காலிகளின் காலாடித் தனத்துக்கு சரியான பாடம் கற்பித்தது. கலாநிகழ்ச்சி தொடர்ந்து நடந்தது.

## தாய்சக்தி தலைநிமிர கட்சிக்கு நிதி தருகிறேன்

ஐக்கிய புதிய தமிழகத்தில் பெண்மக்கள் சம உரிமையும் நல்வாழ்வும் பெறுவார்கள் என்பதில் எனக்கு அசையாத நம்பிக்கை உண்டு, பெண்ணுரிமைக்காகப் போராடும் கட்சி, நிதிகோரி வேண்டுகோள் விடுத்தவுடன் என் பங்குக்கு 10 ரூபாய் தருவதென முடிவுசெய்தேன். 10 ரூபாய் மொத்தமாகச் சேரவில்லை 2 ரூபாய்தான் இருந்தது. என் கணவர் எனக்கு மருந்து வாங்குவதற்கு, அவர் தன் நண்பரிடம் 3 ரூபாய் கடன் வாங்கி எனக்குக் கொடுத்தார். 25-7-53க்குள் ஐயாயிரம் தேவையென்று அறிக்கை வரவும், மருந்து வாங்குவதற்குக் கொடுத்த ரூபாயைச் சேர்த்து 5 ரூபாய் அனுப்பியிருக்கிறேன். பெற்றுக்கொள்ளுங்கள்! மீதி ரூபாயை சீக்கிரம் அனுப்புகிறேன்

ரெ. சத்தியபாமா,
கும்பகோணம்.

குறிப்பு: தோழர்களே! உங்கள் பங்கு என்ன?

## ஜனசக்தி உங்களைக் கேட்கிறது

உலக நிகழ்ச்சிகளையும் உழைப்பாளி வர்க்கப் போராட்டச் செய்திகளையும் அள்ளிக்கொண்டுவரும் ஜனசக்தி இன்று ஒவ்வொருவருடைய கையிலும் இருக்கவேண்டும். இயக்கத்தின் பரப்புக்கு ஏற்றவாறு, பத்திரிகையின் எண்ணிக்கையும் பல்கிப் பெருகவேண்டு மென்பதை நமது தோழர்கள் உணரத் தலைப்பட்டுவிட்டார்கள். உதாரணம் வேண்டுமா? இதோ!

✶ மதுரைத் தோழர்கள் இதுவரை 325 தான் வரவழைத்தார்கள். அதை 400 ஆக அதிகரித்திருக்கிருர்கள்.

✶ அம்பாசமுத்திரம் தோழர்கள் 25 தான் வரவழைத்து வந்தார்கள். இப்பொழுது 50 வரவழைக்கிருர்கள்.

✶ கடலூர் தோழர்கள் 20க்குப் பதில் 30 வரவழைக்கிருர்கள்.

தோழர்களே! தொழிலாளர்களே! விவசாயிகளே! உங்கள் பங்கு என்ன? எங்கே பார்க்கலாம்!

## திண்டுக்கல் தாலூக்கா

# பஞ்ச நிவாரண மகாநாடு

## பஞ்சப் பிரதேசமென அறிவிக்க போராட வேண்டுகோள்

**திண்டுக்கல் தாலுகாவில் பாளையம், வேடசெந்தூர், எரியோடு, வடமதுரை, சாணார்பட்டி பிர்க்காக்களையும், பாதிக்கப்பட்டுள்ள இதர கிராமங்களையும் பஞ்சப்பிரதேசமாக உடனே சர்க்கார் பிரகடனப்படுத்தி நிவாரண வேலைகளைத் தொடங்க வேண்டுமென்று 3-7-53ல் திண்டுக்கல் தாலுகா பஞ்சநிவாரண மகாநாட்டில் ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. விவசாயிகள் தங்கள் ஆடுமாடுகளையும், பண்ட பாத்திரங்களையும், நகைகள், உழுபடை கருவி உட்பட அனைத்தையும் விற்றுவிட்டார்கள். எவ்வித வேலையுமில்லாமல் வேலை தேடி கூட்டம் கூட்டமாக ஊரைவிட்டு பலர் வெளியேறிவிட்டனர். இந்நிலையிலும் சர்க்கார் இப்பிரதேசத்தை பஞ்சப்பிரதேசமெனப் பிரகடனம் செய்யாதிருப்பதை தீர்மானம் வன்மையாகக் கண்டித்துள்ளது.**

திண்டுக்கல் தாலுகா பஞ்சநிவாரண மகாநாடு 3-7-53ல் எரியோட்டில் தோழர் ஏ. முனியப்பன் தலைமையில் நடைபெற்றது. மகாநாட்டிற்கு 20 மைல் 30 மைல் சுற்றுவட்டாரத்திலிருந்து ஏராளமான விவசாயிகள் ஊர்வலமாக வந்தனர். மகாநாடு ஆரம்பிப்பதற்கு முன்பு காலை 9 மணிக்கு முருநெல்லிக்கோட்டையிலிருந்து "திண்டுக்கல் தாலுக்காவை பஞ்சப் பிரதேசமெனப் பிரகடனப்படுத்து!", "கஞ்சித் தொட்டிதிற", வேலை வேண்டும் என்று கோஷித்துக் கொண்டு ஊர்வலம் வந்தது.

தோழர் வி. மதனகோபால் எம். எல். ஏ. மகாநாட்டிற்கு வந்துள்ள பிரதிநிதிகளை வரவேற்றுப் பேசினார். மதுரை ஜில்லா விவசாயிகள் சங்கத் தலைவர் தோழர் ஆர். ராமராஜ் பேசுகையில், "விவசாயிகள் கிராமங்களை விட்டு வெளியேறுவதைத் தடுக்கவேண்டும். சர்க்காரை பஞ்ச நிவாரண வேலைகளை ஏற்று நடத்தும்படி நிர்ப்பந்திக்கவேண்டும். இதற்காக பலம் வாய்ந்த விவசாயிகள் சங்கத்தைக் கட்டவேண்டும்." என்று கேட்டுக் கொண்டார்.

### முக்கிய தீர்மானங்கள்

மதுரை ஜில்லா கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் என். சங்கரையா பேசுகையில் விவசாயிகள் தங்கள் முன்னுள்ள நெருக்கடியைப் போக்க இடைவிடாது போராட வேண்டும் என்று கூறினார்.

மகாநாட்டில் கீழ்க்கண்ட முக்கிய தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

1. திண்டுக்கல் தாலுகாவில் பூரண பஞ்சத்தில் சிக்கியுள்ள பாளையம், வேடசெந்தூர், எரியோடு, வடமதுரை, சாணார்பட்டி, பிர்க்காக்களையும், பாதிக்கப்பட்டுள்ள இதர பிர்க்காக்களையும் சர்க்கார் பஞ்சப் பிரதேசமென பிரகடனம் செய்யவேண்டும்

2. சென்ற வருட விளைச்சலில் விதை அளவுகூட தான்யம் கிடைக்காததால், பூரண வரிவஜா செய்யவேண்டும்.

3. (அ) இங்கு ஒவ்வொரு கிராமத்திற்கும் குறைந்தபட்சம் ரூ. 3 லட்சம் கடன் உள்ளது. வட்டியாக மட்டும் ரூ. 1½ லட்சம் வருடா வருடம் கொடுக்கப்பட்டு வருகிறது. இதனால் விவசாயிகள் நிலத்தை இழந்து வருகின்றனர். இதைத் தடுக்க 5 வருடத்திற்கு எல்லா கடன்களையும் ஒத்தி வைக்க சட்டம் கொண்டுவர வேண்டும்.

(ஆ) மாடுவாங்கவும் கிணறுகளை ஆழப்படுத்தவும் இந்தத் தாலூகாவிற்கு ரூ. 5 லட்சம் தக்காவி கடன் கொடுக்கவேண்டும்.

4. விவசாயிகள் விதை வாங்க முடியாத நிலைமையில் உள்ளனர். ஆகவே பயிர் செய்வதை தொடங்குவதற்கு வசதியாக உடனே சர்க்கார் 15 நாட்களுக்குள் இந்தத் தாலூகாவிற்கு தேவையான எள், கடலை, சோளம், சாமை, உளுந்து கொள் விதைகளை கடனாகக் கொடுக்கவேண்டும். இல்லாவிட்டால் பயிரிட முடியாத நிலைமை.

5. பாளையம், எரியோடு வேடசந்தூர், வடமதுரை, சாணார்பட்டி பிர்க்காக்களில் உள்ள ஒவ்வொரு ரெவனியூ கிராமத்திலும் ஆத்தூர், திண்டுக்கல் கஸ்பாவில் பாதிக்கப்பட்ட கிராமங்களிலும் கஞ்சித் தொட்டி திறக்கவேண்டும். பள்ளிச் சிறுவர்களுக்கு பகல் உணவும் ஏழைகளுக்கு உடையும் வழங்க வேண்டும்.

### குடவனாற்றில் அணைகட்டு

6. லக்ஷமணம்பட்டிக்கு அருகில் குடவனாற்றில் அணைக்கட்டு கட்டவேண்டும். பூதிபுரம், லக்ஷமணம்பட்டி, அணைகளையும் தொட்டணம்பட்டி, பெல்ல கண்ட சமுத்திரம், தென்னம் பட்டி, மந்தக்குளம், பிளாத்து மங் தக்குளம், ஷெ யூர் உப்புக்குளம், கூடலூர், அய்யங்குளம், சல்லக் குளம், பாளையம் கணக்கப்பிள்ளை குளம், தம்மலகுண்டு இவைகளை மராமத்து செய்யவேண்டும். ஆனை விழுந்தான் ஓடை அணை, சித்தையன்கோட்டைக்கு மேற்கில்உள்ள கூழையாறு, குடவனாறு அணை, சிரங்காடு நாயோடை அணை இம் மூன்று அணைகளையும் புதிதாகக் கட்டவேண்டும்.

7. வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க மாங்கொம்பு மலை, தொப்பயசாமி மலை, சிறுமலை, பன்றி மலை, தோணி மலை, கோம்பை மலை போன்ற மலைகளில் காய்ந்த சுள்ளிகள், பசுந்தழைகள் அறுக்க கூலித் தொழிலாளிகளுக்கு அனுமதியளிப்பதின் மூலம் 20,000 பேருக்கு 6 மாதம் வேலை கொடுக்கமுடியும்.

8. தென்னை மரங்களில் பதனீர் இறக்க அனுமதிக்கவேண்டும்.

9. குடி தண்ணீருக்காக பாளையம் பிர்க்காவில் 50 கேணிகளும், வேடசந்தூரில் 50 கேணிகளும், எரியோடு பிர்க்காவில் 30, வடமதுரை பிர்க்காவில் 40ம் வெட்ட வேண்டும். புதுக்கிணறுகளை வெட்ட சர்க்கார் ரூ. 70 ஆயிரமும் பழைய கிணறுகளை ஆழப்படுத்த ரூ. 30 ஆயிரமும் சர்க்கார் சாங்ஷன் செய்யவேண்டும்.

இவை தவிர மற்றும் பல முக்கிய தீர்மானங்களும் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்டன. தீர்மானங்களை ஆதரித்து தோழர்கள் ராஜரத்தினம் ராஜமாணிக்கம், ராமசாமி, ஆனைப்பட்டி ரத்தினம், கரையாம்பட்டி முத்துசாமி, லக்கய கவுண்டர்; பி. கந்தசாமி, சீனிவாசன், எல்.ராமலிங்கம், எம் ராமமூர்த்தி, ஆதிமூலம், முத்துராமலிங்கம், களுவன், ஆண்டியப்பன், ஆர். சுவாமிநாதன், இரா. கோவிந்தன் ஆகியோர் பேசினர்.

மாலையில் வடமதுரை, பிலாத்து, கொல்லப்பட்டி, அய்யலூர் ஆகிய ஊர்களிலிருந்து சுமார் 500 பேர்கள் தாரை, தப்பட்டையுடன் ஊர்வலமாக வந்து சேர்ந்தனர். பின்னர் மகாநாட்டுப் பந்தலிலிருந்து சுமார் 2000 பேர்கள் கொண்ட பெரும் ஊர்வலம் பொதுக்கூட்டம் நடைபெறும் மைதானத்தை வந்தடைந்தது. பொதுக்கூட்டத்திற்கு சுமார் 6000 பேர்கள் வந்திருந்தனர்.

பொதுக் கூட்டத்திற்கு வடமதுரை பஞ்சாயத்துப் போர்டு தலைவர் தோழர் என். எஸ். ராஜன் தலைமை வகித்தார். பஞ்சத்தைப் போக்க சர்க்காரை நடவடிக்கை எடுக்கும்படி செய்ய சகல மக்களும் ஒன்றுபட்டுப் போராட வேண்டும் என்பதை வற்புறுத்தி தோழர்கள் எ. பாலசுப்ரமணியம், எஸ். எ. தங்கராஜன், கே. பி. ஜானகி, என். சங்கரய்யா ஆகியோர் விளக்கமாகப் பேசினர்.

இரவு 11 மணிக்கு தோழர் வி. மதனகோபால் தலைமையில், 'துன்ப வாழ்வு' என்னும் நாடகம் சிறப்பாக நடத்திக் காட்டப் பட்டது. தாலுக்காவில் விவசாயிகள் பஞ்சத்தினாலும், கடன் தொல்லையினாலும், கஷ்டப்படுவதைத் தத்ரூபமாக நாடகத்தில் எடுத்துக்காட்டுவதை 8000 மக்கள் நிசப்தமாகப் பார்த்து மகிழ்ந்தனர். (நமது நிருபர்)

---

# தி. க., தி. மு. க. தலைவர்களை கைது செய்ததற்கு

## கம்யூனிஸ்ட் கட்சி கண்டனம்

### நிபந்தனையின்றி உடனே விடுதலை செய்!

தி. க, தி மு க. தலைவர்களை கைது செய்ததைக் கண்டித்து இந்திய கம்யூனிஸ்டு கட்சியின் தமிழ்நாடு கமிட்டி இன்று நிறைவேற்றியுள்ள ஒரு தீர்மானத்தில் கூறுவதாவது:—

அரசாங்கத்தின் இந்த நடவடிக்கையை வன்மையாகக் கமிட்டி கண்டிக்கிறது. ஜனநாயக உரிமைகளை பறிக்கும் இந்த அடக்குமுறையை எதிர்த்துத் தமிழ்நாடு எங்கும் கண்டனக் குரல் எழவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறது. காரணமின்றி கைது செய்யப்பட்ட தி. மு. க. தலைவர்களை நிபந்தனையின்றி விடுவிக்கவேண்டும்.

ராஜாஜியின் புதிய கல்வி திட்டத்தை வாபஸ் செய்ய வேண்டும். இந்த திட்டத்தை வாபஸ் செய்ய வேண்டும் என்ற கிளர்ச்சியை இத்தகைய அடக்குமுறையால் அடக்கிவிடலாம் என்று ராஜகோபாலாச்சாரி கருதினால் அது மிகப் பெரிய தவறாகும்.

---

# வேலையில்லாத் திண்டட்டத்தைப் போக்க

## நீர்ப்பாசனத் திட்டங்களை ஆரம்பிக்கவும்

### மத்திய கிசான் கௌன்சில் தீர்மானம்

**சர்க்கார் உணவு மான்யம் அளிக்கவேண்டும்; அதிக மலிவு தானியக் கடைகளையும் கஞ்சித் தொட்டிகளையும் திறக்கவேண்டும்; நிவாரண வேலைகளைத் தொடங்கவேண்டும்; பெரிய, சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களைத் தொடங்கி வேலையில்லாதோருக்கு வேலை கொடுக்கவேண்டுமென்று கோரும் ஒரு தீர்மானம் ஜூலை 4, 5ல் புது டில்லியில் கூடிய அகில இந்திய கிசான் சபை மத்திய கவுன்சில் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது.**

பூதான இயக்கம் சம்பந்தமாகவும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. நிலத்திற்கான போராட்டம் தெலுங்கானாவில் உச்சக்கட்டத்தை அடைந்துள்ள இந்த நிலைமையில் பூதான இயக்கம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. அங்கு உள்ள விவசாயிகள் முன் கையெடுத்து நிலச்சுவான் தார்களிடமுள்ள உபரி நிலங்களைக் கைப்பற்றி நிலமில்லாத விவசாயிகளிடத்தில் வினியோகித்து வருகின்றனர். இந்த நிலைமையில் பூதான இயக்கம் உண்மைப் பிரச்சினையிலிருந்து மக்களுடைய கவனத்தை வேறு திசைகளில் திருப்பிவிடுகிறது.

இந்த இயக்கம் விவசாயிகள் இயக்கத்தையும், ஜனநாயக சக்திகளையும் எதிர்த்து நடத்தப்படுகிறது என்பது பூதான இயக்கத் தலைவர்கள் பேச்சுகளிலிருந்தும், போக்கிலிருந்தும் வெளியாகிறது. மேலும் நிலச்சுவான் தார்கள் அளித்துள்ள நன்கொடை எவ்வளவு போலித்தன்மைவாய்ந்ததாயிருக்கிறது என்பதையும் இது எடுத்துக்காட்டுகிறது.

எந்த நிலச்சுவான் தார்கள் குத்தகைதார்களை நிலத்தைவிட்டு வெளியேற்றுகிறார்களோ அவர்கள்தான் உபயோகமற்ற, கட்டாந்தரையான, பயிரிடமுடியாத நிலங்களை நன்கொடையாக பூதான இயக்கத்திற்கு அளிக்கின்றனர். விவசாயிகளை அப்புறப்படுத்துவதையும், அவர்கள் நிலத்தை நிலச்சுவான்கள் பிடுங்குவதையும் மறைக்கவே இப்பூதான இயக்கம் கருவியாக விளங்குகிறது என்று தீர்மானம் அச்சுறுத்துகிறது.

விவசாயிகளை நன்கொடையளிக்கும்படி கட்டாயப்படுத்தாதிருக்கும்படியும், குத்தகைதார்களின் நிலங்களை தானமளிக்காதிருக்கவும், நிலங்கள் சரியாக வினியோகிக்கப்படவும் விவசாய சங்க ஊழியர்கள் பாடுபடவேண்டுமென்று தீர்மானம் கூறுகிறது.

நிலச்சுவான்தாரி முறையை ஒழிக்கவும், உடனடியாக நில வெளியேற்றத்திற்கு தடைவிதிப்பது, குத்தகைக் குறைப்பு, கடன்தள்ளுபடி மற்றும் பல பிரச்னைகளில் விவசாயிகளுடன் ஒத்துழைக்கவேண்டுமென்று பூதான இயக்கவாதிகளை தீர்மானம் கேட்டுக்கொள்கிறது.

சர்க்கரை சம்பந்தமாக நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தில், சர்க்கார் கரும்புவிலையை குறைத்ததற்கும், கண்ட்ரோலை நீக்கியதற்கும், சர்க்கரை விலை விஷம்போல் ஏற வழி செய்துள்ளதற்கும், அன்னிய சர்க்கரையை இறக்குமதி செய்வதற்கும் கண்டனம் தெரிவிக்கப்பட்டுள்ளது.

மத்திய கிசான் கவுன்சில் கூட்டத்திற்கு திரு. நானா படேல் தலைமை வகித்தார். பொதுச் செயலாளர் திரு. என். பிரசாத ராவ், பி. சுந்தரய்யா, பங்கிம் முகர்ஜி, கோஸீயன், இ எம். சங்கரன் நம்பூதிரிபாத் மற்றும் பல உறுப்பினர்களும் வந்திருந்தனர்.

---

# புதிய கல்வித் திட்டத்தை உடனே கைவிடுக

## நாமக்கல் மக்கள் 5000 பேரின் கையெழுத்து அறைகூவல்

(கே. வி. இராமசாமி, எம். எல். ஏ.)

"சென்னை ராஜ்ய முதல் மந்திரி அவர்களே! நீங்கள் ஆரம்பப் பாடசாலைகளில் புதிதாகப் புகுத்தியுள்ள கல்வித் திட்டம் எங்கள் குழந்தைகளின் கல்வியை நாசப்படுத்துவதாகும். இதன் மூலம் பிள்ளைகளுக்குப் படிப்பையும், பெற்றோர்களின் தொழிலையும் ஏககாலத்தில் கற்றுக் கொடுக்கப் போவதாகச் சொல்கிறீர்கள், ஆனால் உண்மையில் இதனால் குழந்தைகள் எந்தத் தொழிலையும் கற்றுக்கோள்ள முடியாததுடன், கல்வியும் சரியாகப் பயில முடியாத நிலைமைதான் ஏற்படும்.

"குழந்தைகளை அதிக நேரம் பெற்றோர்களிடமிருந்து பிரிக்க விரும்பவில்லையென்றும், சிறுவயதில் நீண்டநேரம் பள்ளிகளில் குழந்தைகளைப் போட்டு அடைக்க விரும்பாமையாலும், இப்புதிய திட்டத்தைக் கொண்டுவந்ததாக நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் நாங்கள் எங்களின் பிள்ளைகளை அறிவாளிகளாக்க ஐந்து மணி நேரம் பிரியத் தயாராய் இருக்கிறோம். இந்தப் பிரிவு தாங்காது நாங்கள் வேதனைப் படுவோம் என்ற கவலை உங்களுக்கு வேண்டாம்!

"பிள்ளைகளின் படிப்பையும், அவர்களின் எதிர் காலத்தையும் பாழ்படுத்தும் இப் புதிய திட்டத்தை உடனே கைவிட்டு பழையபடியே பாடசாலைகளில் 5 மணி நேரம் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டுமாறு கேட்டுக்கொள்கிறோம்"—என்ற மகஜரில் நாமக்கல் தாலூக்காவில் இதுவரை 5,000 மக்கள் கையெழுத்திட்டுள்ளனர்.

மேலும் நாமக்கல் தாலூக்காவில் உள்ள வேலூர், சேந்தமங்கலம் ஆகிய இரண்டு மேஜர் பஞ்சாயத்களிலும் இதைக் கண்டித்து ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேற்றியுள்ளனர். அத்துடன் சில கிராமப் பஞ்சாயத்துகளும், தோலூர்பஞ்சாயத்தலைவரும் தங்களின் கண்டனத்தை ராஜாஜிக்குத்தெரிவித்துள்ளனர். முத்துகாபட்டி, காளப்ப நாய்க்கன்பட்டி, பழைய பாளையம், சேந்தமங்கலம் ஆகிய இடங்களில் கண்டனக் கூட்டங்கள் நடத்தி இதைக் கைவிடுமாறு தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டுள்ளன.

பள்ளிகளில் இன்றைக்கு நடப்பதென்ன? புதிய திட்டம் அமுலுக்கு வந்ததும் நான் பல பள்ளிகளைப் பார்வையிட்டேன். பல ஆசிரியர்களிடம் இதுபற்றி விவாதித்தேன். பல கிராமங்களில், 5 மணி நேரம் பள்ளிகளில் அனுமதிக்க மறுத்தால் பொதுமக்கள் ஆசிரியர்கள்மீது கோபம் கொள்கிறார்கள். சர்க்கார் பிள்ளைகளை 3 மணி நேரத்திற்குமேல் அனுமதிக்காதே என்று உத்திரவிடுகிறது. இரண்டுக்கும் இடையில் ஆசிரியர்கள் திண்டாடுகிறார்கள். பல பள்ளிகளில் நடைமுறையில் எல்லாப் பிள்ளைகளும் இரண்டு நேரமும் அனுமதிக்கப்பட்டு வருகிறார்கள்.

(10-ம் பக்கம் பார்க்க)

# சர்க்கார் பஸ் தொழிலாளர்களின்

## உயிரை வாட்டுகிறது சர்க்கார்

திமிர்பிடித்த புரூக்ஸ் ட்ராம் வேயை நிறுத்தி 1,600 தொழிலாளர்களைப் பட்டினி போட்டு 3 மாதங்களாகின்றன. தினசரி ஒண்ணேகால் லக்ஷம் பேர் பிரயாணம் செய்துகொண்டிருந்த ட்ராம்களை நிறுத்திவிட்டால், நிலைமை எப்படியிருக்கும்! கோடை விடுமுறை கழிந்து பள்ளிகள், காலேஜ்கள், கோர்ட்டுகள் திறக்கப் பட்டுள்ளதால், ஒவ்வொரு பஸ் ஸ்டாப்களிலும் ஜனக் கூட்டம் சொல்லி முடியாது. பல மணிநேரம் காத்திருந்தாலும் பெண்கள், வயது முதிர்ந்தவர்கள் ஆகியோர்களுக்கு பஸ்ஸில் இடம் கிடைப்பது அர்லபமாயிருக்கிறது. பஸ்களில் ஓவர்லோடு போடப்பட்டு, பிரயாணிகளெல்லாம் வெளவால்களைப் போல் தொங்கிக்கொண்டும், பிதுங்கிக் கொண்டும் போகவேண்டியிருக்கிறது.

இந்த நிலையில், போக்குவரத்துப் பிரச்னையைத் தீர்த்து விட்டதாக, கருப்புக் கண்ணாடியார் கூறுவது, சென்னை மக்களை கிண்டல் செய்வதும் கிள்ளிவிட்டு ஆத்திர மூட்டுவதுமாகும்.

பிரயாணிகளுடைய கஷ்டம் இவ்வாறிருக்க, உயிரைக்கொடுத்து பஸ் போக்குவரத்தை நடத்தி வரும் பஸ் தொழிலாளர்களை இந்த சர்க்கார் எப்படி நடத்துகிறது பாருங்கள்!

### கசக்கிப் பிழிகிறது

இங்கு டிரைவர்கள், கண்டக்டர்கள், கிளீனர்கள், பியூன்கள், ஒர்க்ஷாப் தொழிலாளர்கள், கிளர்க்குகள் உட்பட மொத்தம் 3000 பேருக்குமேல் வேலை செய்கிறார்கள். இதில் பாதிப்பேர் டிரைவர் கண்டக்டர்கள்.

இவர்களை கடந்த 3 மாத காலமாக தினம் 10, 11 மணி நேரம் வரையும் வேலை வாங்குகிறார்கள். டிராம்ரோடுகளெல்லாம் செப்பனிடப்படாததால், பஸ்களெல்லாம் ஆட்டங் கண்டுவிட்டன. பிரயாணிகளும் உயிரைப் பிடித்துக்கொண்டுதான் பிரயாணம் செய்ய வேண்டியிருக்கிறது. அநேக பஸ்கள் நல்ல நிலைமையில் இல்லை. ஆளைக்கொன்ற பிறகுதான் பிரேக் பிடிக்கும் பஸ்களுமுண்டு. எப்பொழுதோ கண்டம் பண்ணி, பழைய இரும்புக்கடையில் கிடைக்கவேண்டிய பஸ்கள், இன்னும் ஓட்டப்பட்டு தொழிலாளிகளின் உயிரை வாங்குகிறது. டிரைவர், கண்டக்டர்களின் சாமர்த்தியத்தாலும் கடும் உழைப்பாலும்தான் எவ்வளவோ விபத்துக்கள் தவிர்க்கப்பட்டு வருகின்றன. இந்த லட்சணத்தில் எக்ஸ்டரா ட்ரிப் வேறு 3, 4 தடவை அடிக்கவேண்டுமென டிராபிக் மானேஜர் டிரைவர்களை வதைக்கிறார். இதை உடனே நிறுத்த வேண்டும்.

டிரைவர்களுக்கு ரூ.46 சம்பளம் 22 ரூ. பஞ்சப்படி, 9 ரூ. வீட்டு வாடகை கொடுக்கப்பட்டு வருகிறது. இவை போதவே போதாது. எவ்வித காலதாமதமுமின்றி இவற்றை உயர்த்தவேண்டும்.

### கண்டக்டர்கள் நிலைமை

கண்டக்டர்கள் எவ்வளவோ உஷாராகவும் சுறுசுறுப்பாகவும் இருந்தாலுங் கூட, சில பல சமயங்களில் பிரயாணிகள் டிக்கட் வாங்கத் தவறுகிறார்கள். இதனால் கண்டக்டர்களின் சீட்டு கிழிக்கப்படுகிறது. இவ்விதம் 1000 பேர் வரை பழிவாங்கப்பட்டிருக்கிறார்கள். இந்த முறை உடனே மாற வேண்டும். பழிவாங்கப்பட்டவர்களை வேலைக்கெடுத்துக்கொள்ள வேண்டும்.

S.S.L.C. பாஸ் செய்த கண்டக்டர்களுக்கு 40 ரூ. சம்பளம், 21 ரூ. அலவன்ஸ், வீட்டு வாடகை 9 ரூ. தரப்படுகிறது. S. S. L. C. அல்லாதவர்களுக்கு சம்பளம் 30 ரூ. அலவன்ஸ் 19 ரூ. வீட்டு வாடகை 7 ரூபாய்தான் தரப்படுகிறது. ஒரேவேலை செய்பவர்களிடையே இவ்விதம் பாரபட்சம் காட்டுவது உழைப்பாளிகளின் உற்சாகத்தைக் கெடுப்பதாகும். எல்லோருக்கும் ரூ. 40–21—9 தரவேண்டும்.

சர்க்கார் பஸ் தொழிலாளருக்கும் சோஷல் இன்சூரன்ஸ் கிடைக்கவேண்டும்.

ஒர்க்ஷாப் தொழிலாளர்களும் வேலைப்பளுவாலும் போதிய சம்பளமில்லாமலும் கஷ்டப்படுகிறார்கள். அவர்களுடைய கோரிக்கைகளையும் சர்க்கார் உடனே கொடுக்கவேண்டும்.

நியாயமான இக் கோரிக்கைகளைப்பெற தொழிலாளர்கள் ஒன்றுபட்டுக் கிளர்ச்சி செய்கிறார்கள்.

—கே. முருகேசன்.




### மீனம்பிகை மோட்டார் தொழிலாளர் வெற்றி

விசாரணையின்றி வேலையை விட்டு நீக்கக்கூடாது என்பதற்காக நடத்தப்பட்ட விருதுநகர் மீனம்பிகை மோட்டார் தொழிலாளர்களின் வீரப்போராட்டம் வெற்றியில் முடிந்தது.

கண்டக்டர் பொன்னுவேல், பழனி, ரத்தினம், அருணசலம், கண்ணுசாமி, சுப்பிரமணியம், அலங்காரம், குருசாமித் தேவர், தவமணி நாடார் ஆகியவர்கள் லேபர் கமிஷனரின் விசாரணைக்குப் பின் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டார்கள்.

இதர கோரிக்கைகளைப் பெற சங்கத்தைப் பலப்படுத்தி வருகிறார்கள்.

# பஞ்சாயத் தேர்தல்களில் மக்கள் கூட்டணி சக்கைபோடு போடுகிறது

வைத்தால் குடுமி-சிறைத்தால் மொட்டை என்று, தானடித்த மூப்பாக, விவசாயி மக்களை ஆட்டி அலைக்கழித்துவந்த பழம்பெரும் தலைகளெல்லாம், விவசாய சங்க ஊழியர்களின் முன்னே உருண்டோடுகின்றன. ஜாதிக்கொடுமை, பாரபட்சம், லஞ்ச ஊழல், பரம்பரை பாத்தியம் ஆகிய அனைத்துக்கும் சமாதிகட்டி, மனிதர் யாரும் சரிநிகர்சமானமாக வாழவும் பஞ்சமும் பசிப்பிணியுமற்ற நல் வாழ்வை அமைக்கவும் பஞ்சாயத்துப் போர்டுகளின் மூலமாகவும் பாடுபடுவோம் என்று கூட்டணி அபேட்சகர்கள் வாக்கு கேட்டார்கள். மக்கள் தந்த பதில் என்ன? அமோக ஆதரவு! வெற்றி மாலை!

*

### பொதட்டூர் பேட்டையிலே!

சித்தூர் ஜில்லா பொதட்டூர் பேட்டை மேஜர் பஞ்சாயத் போர்டு தேர்தலில் நகர மக்கள் கூட்டணி சார்பில் 8 பேர் நிறுத்தப்பட்டார்கள். அந்த 8 பேரும் வெற்றிமுரசு கொட்டுகிறார்கள். தலைவர் ஸ்தானத்துக்கு கூட்டணி சார்பில் என். கே. எஸ். கணேசன் நின்றார். அவருக்கு 1,379 ஓட்டுகள். அவரை எதிர்த்து நின்ற 4 பேர்களில் 3 பேருக்கு ஜாமீன் கோவிந்தா! ஒருவர் ஜாமீன் கிடைத்தது தம்பிரான் புண்ணியம் என்று தப்பிவிட்டார்.

மற்றும் V. S. ஆறுமுகம், T. G. முருகேச முதலியார், A. T. தெய்வசிகாமணி C. M. வரதாரெட்டி, E. M. கோதண்டபாணி முதலிய கூட்டணி அபேட்சகர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

ந. ம. கூ. அபேட்சகர்கள் P. மாணிக்கமும், பீகய்யா (ஹரிஜன்)வும் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

S. P. கிருஷ்ணப்ப முதலியார், J. N. A. குப்புசாமி முதலியார், D. முனிசாமி முதலியார் ஆகிய சுயேட்சையாளர்களும் வெற்றி பெற்றார்கள்,

*

### செங்கத்திலே

வடாற்காடு ஜில்லாவின் மேஜர் பஞ்சாயத்களிலொன்றான செங்கம் தேர்தலில் ஐ. மு. அபேட்சகர்கள் அமோக வெற்றி பெற்றார்கள். மொத்தம் 9 ஸ்தானங்களில் அதில் ஐ. மு. 7 ஸ்தானங்களில் வெற்றிமாலை சூடியிருக்கிறது.

தலைவர் ஸ்தானத்துக்கு ஐ. மு. சார்பில் நின்ற ஆர். ராமசாமி வெற்றி பெற்றார். எதிர்த்து நின்றவர்களுக்கு டிபாசிட் காலி!

மற்றும் பெருமாள், கோவிந்தசாமி, ராஜமாணிக்கம் செட்டியார் ஆகிய ஐ. மு. அபேட்சகர் பெருவாரியான ஓட்டுகளால் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ரஷீம் சாயபு, அப்துல் ரஷீம், தலைவிரிச்சான் எல்லப்பன் (ஹரிஜன்) ஆகிய ஐ. மு. அபேட்சகர்கள் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

### அரிசி விலை ஏறுவதை எதிர்த்து ஐக்கிய முன்னணி

வான் பொய்ப்பினும்

தான் பொய்யா

வற்றுவளம் சுரக்கும் காவிரி பாயும் சோழ நாட்டிலே சோற்றுக்குத் திண்டாட்டம்! அரிசி விலையோ யானை விலை குதிரை விலை! படி அரிசி ரூ. 1-4-0 ரூ, 1-6-0. இதை ஒருக்காலும் அனுமதிக்க மாட்டோமென்று பொது மக்கள் கோஷிக்கிறார்கள்.

பெரு மிராசுதார்களிடம் கட்டாயக் கொள்முதல் செய்! நியாய விலைக் கடைகளை ஏற்படுத்து! என்று திருவையாறு அரசியல் கட்சிகள் அனைத்தும்—தஞ்சை தாலூகாவின் விவசாய சங்க காரியதரிசி எம். ஆறுமுகசாமி, திருவையார் கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி கே. உலகநாதன், தி.மு.க உதவி செயலாளர் என். எஸ். வேலன், தி, க. தோழர் சுபாஷ்சந்திரன் முதலியவர்கள் 2000 பேர்கொண்டக் கூட்டத்தில் முழங்கினார்கள்.

### த. நா. தொழிற்சங்க செய்தி

தமிழ் நாடு தொழிற் சங்க காங்கிரஸ் ஆபீஸில் 11-7-53ந் தேதி சென்னையிலுள்ள இணைக்கப்பட்ட தொழிற் சங்கங்களின் பிரதிநிதிகள் கூட்டம் நடைபெற்றது. 30க்கு அதிகமான பிரதிநிதிகள் கலந்துகொண்டனர். கே. டி. கே. தங்கமணி கோவை தீர்மானங்கள் பற்றி ரிப்போர்ட் செய்தார்.

19ந் தேதி கூட்டுமுறையில் ஊர்வலம், பொதுக்கூட்டம் நடத்துவதெனவும், இதர சங்கங்களுக்கு அழைப்பு அனுப்புவதெனவும், அன்று த.நா.தொ.ச. காங்கிரஸ் தீர்மானப்படி "டிராம் சர்வீஸை சர்க்கார் எடுக்கவும்" என்பதை வற்புறுத்துவதெனவும் முடிவு செய்யப்பட்டது.

# பஜகோவிந்த ஆட்சியிலே பட்டினிச்சாவுகளே கண்ட பலன்

"என்னுடைய செங்கோல் ஆட்சியிலே பட்டினி கிடந்து யாரும் சாகவில்லை. சோறு கிடைக்காவிட்டால், கண்டதைக் கடியதைக் தின்றிருப்பார்கள். அதனால் வியாதிகள் வந்திருக்கும். வியாதியின் விளைவாகத்தான் செத்துப் போயிருக்கலாமே தவிர, பட்டினியால் செத்திருக்க முடியாது."

இது ராஜாஜியின் ஞான உரை. சாதாரண மனித மூளையில் இப்படிப்பட்ட அருளுரைகள் ஊற்றெடுக்காது.

ராஜாஜி உணவு கண்ட்ரோலை எடுத்தார். நியாய விலைக்கடைகளையும் கஞ்சித் தொட்டிகளையும் மூடி வருகிறார். ஜமீன்தார்களுக்கு 75 லக்ஷம் ரூபாய் கொடுக்கும்போது, பஞ்ச நிவாரண வேலைகளுக்கு 22 லக்ஷமே ஒதுக்கினார். இதனால் பஞ்சம் பரவுகிறது. பட்டினிச் சாவுகள் மேலும் அதிகரிக்கின்றன,

### எரியோடிலே

திண்டுக்கல் தாலூகா எரியோடு பிர்க்கா கோவிலூரில் 45 வயதுள்ள பெண் 29-6-53ல் பட்டினியால் இறந்து கிடந்தாள். நடக்கவும் சக்தியற்று, வேப்பமரத்தடியில் 2 நாளாய் பட்டினி கிடந்து சாய்ந்துவிட்டாள். அவள் தலைமாட்டிலே அவள் பிச்சையெடுத்துவந்த மண் சட்டி கிடந்தது.

### புதுக்கோட்டையிலே

புதுக்கோட்டை டவுன் தெற்கு சந்தைப் பேட்டையில் விஷக்கடி வைத்தியசாலைக்குப் பின்புறம் 4 7-53 மாலை 6 மணிக்கு 35 வயது மதிக்கத்தக்க ஒருவர் இறந்து கிடந்தார். 6 மாத காலமாக இப் பகுதிகளில் பிச்சையெடுத்து, பிச்சையும் கிடைக்காமற் போகவே இக்கதிக்கு உள்ளானார்.

1953 மார்ச் முதல் ஜூன் முடிய 66 அனாதைப் பிணங்கள் எடுக்கப்பட்டிருப்பதாக முனிசிபாலிடியின் பட்டியல் கூறுகிறது.

### பசும்பொன் விளையும் கோலாரிலும்

கோலார் தங்க வயலில் பஸ் ஸ்டாண்டில் 7-7-53 காலை 6 மணிக்கு ஒரு பெண் பட்டினியால் மாண்டு கிடந்தாள்.

தமிழ்நாட்டில் திருவளம் என்ற ஊரைச் சேர்ந்த மேல்பாடி கிராமத்தைச் சேர்ந்தவரென்றும், பிச்சை யெடுத்துப் பிழைக்க வந்தவிடத்தில் பட்டினிச் சாவு பலி கொண்டது என்றும் மக்கள் பேசிக் கொள்ளுகிறார்கள்.

பொதுமக்களே அந்தப் பிணத்தை அடக்கம் செய்தனர்.

பட்டினிச்சாவு இல்லையென்று பகல்வேஷம்போடும் ராஜாஜி சர்க்காரே! இதற்கு உம் பதில் என்ன?

### பஞ்சாலை அட்ஜுடிகேஷன்

1–1–1952 லிருந்து மின்சாரப் பற்றாக்குறையினால் வேலையில்லாமலிருந்த காலத்துக்கு நிவாரணம் கொடுக்கவேண்டுமா? அப்படியானால் எவ்வளவு?" என்று ஸ்பெஷல் தொழில் கோர்ட்டுக்கு சென்னை சர்க்கார் விட்டுள்ளனர். கே. ஸ்ரீனிவாசன் ஐ. சி, எஸ். ஸ்பெஷல் அட்ஜுடிக்கேட்டராக நியமிக்கப்பட்டுள்ளார். கோர்ட் விசாரணை சென்னையில் மைலாப்பூரில் நடைபெறும்.

இந்த கோர்ட் நடவடிக்கை 65 மில்களைக் கட்டுப்படுத்தும். மதுரையிலுள்ள சிறு மில்களும் தூத்துக்குடி ஸ்பின்னிங் மில்லும் சேர்க்கப்படவில்லையென தெரிகிறது. நோட்டீஸ் 32 யூனியன்களுக்கு அனுப்பப்பட்டுள்ளன. அவைகளில் 12 சங்கங்கள் T. N. T. U. C. யுடன் இணைக்கப்பட்டவை, திருப்பூர் மில் தொழிலாளர் சங்கம் போன்றவை சேர்க்கப்படவில்லையென தெரிகிறது. சேர்க்கப்படாத மில், யூனியன்கள்பற்றி கமிஷனருக்கும் அட்ஜுடிகேட்டருக்கும் சம்பந்தபட்ட யூனியன்கள் தொழிலாளர்கள் எழுதவும்.

T. N. T. U. C. யூனியன்கள் கள் இம்மாதம் 2, 3 தேதிகளில் 1949 லிருந்து நிவாரணம் கொடுக்க வேண்டுமெனவும், நிவாரணம் அடிப்படை சம்பளம் + ½ டி. எ. எனவும், உடனடியாக இடைக்கால நிவாரணம் வேண்டுமெனவும் அட்ஜுடிக் கேட்டருக்கு ஸ்டேட்மெண்ட் அனுப்பியுள்ளார்கள், இடைக்கால நிவாரண கிளர்ச்சி வலுக்கட்டும்.

### குட்டி அண்ட் ராவ் தொழிலாளர்கள்

சென்னை குட்டி அண்ட் ராவ் இன்ஜினீரிங் தொழிலாளர் சங்கப் பொதுக்கூட்டம் 6–7–'53ல் நடந்தது.

* பட்டினி கிடக்கும் டிராம்வே தொழிலாளர்களுக்கு நன்கொடை வசூலித்துக் கொடுப்பதென்றும்;

* வெள்ளை முதலாளி புரூக்ஸுக்கு அடிபணியாமல், சர்க்காரோ, கார்ப்பரேஷனோ டிராம்வேயை எடுத்து நடத்தவேண்டுமென்றும் தீர்மானித்து, தங்களுடைய வர்க்க ஆதரவையும், இதயத் துடிப்பையும் வெளிப்படுத்தினார்கள்.

# கைது செய்யப்பட்ட தி. மு. க., தி. க. தலைவர்களை உடனே விடுதலை செய்க!

## த.நா.தொ.ச. காங்கிரஸ் தலைவர்கள் கோரிக்கை!

தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் பொதுச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமணியம், உப-தலைவர் தோழர் கே.டி.கே. தங்கமணி செயலாளர் தோழர் எஸ்.எம். ராமையா ஆகியோர் பின்வருமாறு கூறியுள்ளனர்.

திராவிட முன்னேற்றக் கழக தலைவர்களையும், தி. க. தலைவர்களையும். கைது செய்வதின் மூலமாக சென்னை சர்க்கார் எடுத்துக்கொண்டுள்ள நடவடிக்கை வன்மையாகக் கண்டிக்கத்தக்கது. புதியகல்வித்திட்டத்தை ஜனநாயகத்திற்கு விரோதமான ரீதியில் புகுத்தியிருப்பதையும், அதனால் குழந்தைகளுக்கு ஏற்படும் தீங்குகளையும் பற்றி ராஜ்யம் பூராவும் வன்மையாக பொதுமக்கள் கண்டித்துள்ளனர். திட்டத்தை சகல தொழிற்சங்கங்களும் கண்டிக்கவேண்டுமென்றும் ஜூலை 12ல் கண்டன நாள் கொண்டாட வேண்டுமென்றும் தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டி முடிவு செய்தது.

இப்போது சர்க்கார் கொஞ்சநஞ்சமிருந்த பிரஜா உரிமைகளையும் கொலைசெய்து விட்டார்கள். சென்ற மாதக் கடைசியில் சென்னையில் தொழிற்சங்க தலைவர்கள் கைது செய்யப்பட்டதும், தொழிற்சங்க ஆபீஸ்கள் சோதனை யிடப்பட்டதும் இப்போது தி.மு.க. தலைவர்கள் கைது செய்யப்பட்டிருப்பதும் இதற்கு உதாரணங்கள்.

இந்தச் செய்கையை சகல தொழிற்சங்கங்களும், தொழிலாளிகளும் வன்மையாகக் கண்டிக்க வேண்டுமென்று நாங்கள் கோருகிறோம். சர்க்கார் உடனடியாக கைது செய்யப்பட்ட தலைவர்களை விடுதலை செய்ய வேண்டுமென்று நாங்கள் கோருகிறோம்.

# தொ. சங்க ஒற்றுமையைக் கட்டுவதெப்படி?

## உலகத் தொழிற் சங்க சம்மேளனம் கூறும் எட்டு கோட்பாடுகள்

சுரண்டப்பட்ட மக்களிடையே ஒற்றுமை ஏற்படுவதைக் கண்டு சுரண்டும் கும்பல்கள் நடு நடுங்குகின்றனர். வர்க்கங்கள் தோன்றினதிலிருந்து சரித்திரத்தின் எல்லா காலகட்டங்களிலும் இது நிலையான உண்மையாக இருந்து வந்துள்ளது. சுரண்டப்பட்ட மக்களிடையே ஒற்றுமையில்லாதிருப்பது சுரண்டும் கூட்டத்தின் கையிலே ஒரு வசதியான ஆயுதமாகும். அதன்மூலம் அவர்கள் தங்கள் ஆட்சியை நீடிக்கவும், மக்களைப் பாழ்படுத்தவும் முயன்று வந்துள்ளனர்.

ஆறுவருட அனுபவத்திற்குப் பிறகு, இப்பொழுது நம் நாட்டில் வர்க்க உணர்வு பெற்ற தொழிலாளர்கள் தொழிற் சங்க ஒற்றுமை என்ற பிரச்னையில் அதிக சிரத்தை செலுத்த ஆரம்பித்துள்ளனர்.

### தொழிற்சங்க ஒற்றுமை வேறு, அரசியல் ஒற்றுமை வேறு!

சில தொழிலாளர்கள் தொழிற்சங்க ஒற்றுமையையும், அரசியல் ஒற்றுமை, ஜனநாயக முன்னணி ஆகியவைகளையும் ஒன்றாகவே கருதி குழப்பமடைந்துள்ளனர். இன்னும் சிலர் தொழிற் சங்க ஒற்றுமை என்றால், நிச்சயம் அது அரசியல் ஒற்றுமையும் ஆகும் என்று அர்த்தப் படுத்துகின்றனர். எந்த ஒற்றுமை முதலில் ஏற்பட வேண்டுமென்று சிலருக்கு சந்தேகமிருக்கிறது.

ஆகவே, இதுபற்றி உலகத் தொழிற் சங்கக் காங்கிரஸ் என்ன சொல்லியிருக்கிறது என்று நாம் கவனிக்க வேண்டும்.

தொழிற்சங்க ஒற்றுமை என்ற பிரச்னையும், பல்வேறு அரசியல் கட்சிகளின் ஒற்றுமை என்ற பிரச்சினையும் வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு மாதிரி ஏற்பட்டுள்ளன. ஆனால், அதே சமயத்தில் தொழிற் சங்க ஒற்றுமையிருந்தால், அதைத் தொடர்ந்து நிச்சயம் அரசியல் ஒற்றுமை ஏற்படுமென்று நாம் எவ்விதத்திலும் ஒரு குருட்டுத் தத்துவ வாதத்தைக் கொள்ளலாகாது. அதே போல் அரசியல் ஒற்றுமை ஏற்பட்டிருந்தால், அதனால் நிச்சயமாக தொழிற் சங்க ஒற்றுமை ஏற்பட்டிருக்கும் என்றும் சொல்லிவிட முடியாது.

ஆயினும் இந்த இரண்டும் ஒன்றையொன்று பாதிக்கவே செய்யும்.

1953 பிப்ரவரியில் நடைபெற்ற உலகத் தொழிற் சங்க சம்மேளனத்தின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில் இப்பிரச்னை தீர்க்கமாக ஆலோசிக்கப்பட்டது. இது சம்பந்தமாக உ. தொ. ச. சம்மேளன பொதுக்காரியதரிசியின் ரிபோர்ட் முதலாளித்வநாடுகளிலும், காலனி நாடுகளிலும் தொழிற் சங்க ஒற்றுமைக்காகப் பாடுபடும்போது, கீழ் வரும் 8 கோட்பாடுகளையும் கடைபிடிக்க வேண்டுமென்று கூறுகிறது.

### எட்டு கோட்பாடுகள்

1. தொழிலாளர்களிடையே முன் முயற்சியை வளர்க்க வேண்டும்; காரியத்தில் இறங்குவதற்கு அவர்கள் எந்த அளவிற்குத் தயாராயிருக்கிறார்கள் என்பதுபற்றி நாம் அவர்களிடமிருந்து கற்றுக் கொள்ளவேண்டும்.

2. ஸ்தாபனத்தின் பலஹீனம் வெளிப்படும்போதும், தொழிலாளிகள் அதன் வேலையிலேற்பட்டுள்ள தோல்வியைப் பார்க்கும் போதும், நம்மிடம் எத்தகைய போலி கௌரவமும் இருக்கக் கூடாது, எப்பொழுதும் திட்டவட்டமாகவும், யதார்த்த பூர்வமாகவும் இருக்கவேண்டும்.

3. தினசரி நடவடிக்கைகளின் மூலம், செக்டேரியனிசத்தையும் சந்தர்ப்பவாதத்தையும் போக்குவதற்கு தயாராயிருப்பதை நிரூபிக்க வேண்டும். வெறும் தத்துவார்த்தப் பிரசங்கங்களும், கட்டுரைகளும் பிரயோஜனமில்லை.

4. தொழிற் சங்கங்கள் பயனுள்ள முறையில் ஜனநாயகரீதியில் செயல்படும்படிச் செய்ய வேண்டும். தொழிற்சங்க ஜனநாயகம் மீறப்படும்போது, அதைப் பாதுகாப்பதற்காகப் போராட வேண்டும். தொழிற்சங்க தலைமையினுள்ளேயே கூட்டாக வேலை செய்யும் முறையைக் கொண்டுவர வேண்டும்.

5. தொழிலாளர்களிடையே நேரடியாக வேலை செய்யவேண்டும். எங்கெங்கு தொழிற்சங்க வேலையில் அதிகாரவர்க்க மனோபாவம் காட்டப்படுகிறதோ அப்பொழுது அதை ஒழித்துக்கட்ட வேண்டும்.

### கட்சிப் பற்றற்ற வெகுஜன ஸ்தாபனம்

6. ஒரு தொழிற்சங்க ஸ்தாபனத்தை கட்சிப்பற்றற்ற சகல தொழிலாளிகளின் வெகுஜன ஸ்தாபனமாகக் கருதவேண்டும். அதனுடைய ஸ்தாபன வடிவங்களைக் கட்டுப்படுத்தக்கூடாது. தொழிலாளி வர்க்கத்தின் அரசியல் முன்னணிப் படை வகிக்கும் பாத்திரத்தை ஒரு தொழிற்சங்கம் வகிக்கும்படி தவறாக செய்துவிடக் கூடாது.

7. மிகவும் சரியான ஸ்தாபன உருவங்களை ஏற்படுத்தவேண்டும். ஒற்றுமையான நடவடிக்கைகளுக்கேற்பவும், தொழிற்சங்க கோரிக்கைகளுக்காகவும் போராட திட்டமிட வேண்டும்.

ஒரு சங்கத்திலுள்ள தொழிலாளிகள் அரசியல் ரீதியில் பிளவுபட்டிருந்தால், அந்த சங்கம் தன்னுடைய நடவடிக்கைகளில் எந்த ஒரு அரசியலைப் பின் பற்றும் தொழிலாளிகளின் குரூப்புக்காகவும் செயல்படுவதாக இருக்கக் கூடாது.

தொழிற்சங்கத்தின் தலைமையும், தொழிற்சங்க ஸ்தாபனத்தின் ஒற்றுமையைப் பிரதிபலிப்பதாக அமைக்கப்படவேண்டும். அதிலுள்ள பல்வேறு அரசியல் பிரிவினர்களுக்கும் தலைமையில் பிரதிநிதித்வம் இருக்கவேண்டும்.

தொழிற்சங்கத்திற்கு அங்கத்தினர்களை சேர்ப்பதில் அதிக கவனம் செலுத்தவேண்டும். தொழிற் சங்கத்தில் இன்னும் சேராத தொழிலாளர்களை சங்கம் திட்டமிடும் வெகுஜன நடவடிக்கைகளில் பங்கு கொள்ளும்படி அறைகூவல் விடவேண்டும். அதன் மூலம் அவர்களைத் தொழிற்சங்க அங்கத்தினர்களாக்குவதற்குத் தயார்படுத்தவேண்டும்.

8. தொழிலாளிகளின் ஒற்றுமைக்குக் குந்தகம் விளைவிக்கும் சகல சூழ்ச்சிகளையும் அம்பலப் படுத்தவேண்டும்.

இதற்காக, சீர்குலைவு வாதிகளின் பிரசாரத்திற்கு இரையாகும் தொழிலாளிகளிடையே பரந்த அளவில் விளக்கப்பிரசாரம் செய்ய வேண்டும்.

இந்தப் பல்வேறு போசனைகளையும் நம்முடைய தினசரி நடவடிக்கைகளில் நாம் கடைப்பிடித்தால், நம்முடைய ஸ்தல, தேசீய, சர்வதேச தொழிற் சங்க ஸ்தாபனங்கள் தங்கள் பங்கை நிறைவேற்ற உதவும். மேலும் தங்களுடைய எல்லா போராட்டங்களிலும், தொழிலாளிகளைப் பெருவாரியாகத் திரட்டுவதற்குத் தங்களுடைய நடவடிக்கை முறைகளை அபிவிருத்தி செய்வதற்கு உதவும், மேலும் பெரிய போராட்டங்களில் இறங்கவும் உதவி செய்யும்.''



எஸ். ஏ. டாங்கே

இந்தக் கோட்பாடுகளெல்லாவற்றிற்கும் சமத்வமான முக்யத்வம் உண்டு. ஆயினும் நம்முடைய நாட்டின் நிலைமையில், தொழிற் சங்கப் பிளவுகளுக்கு அரசியல் வித்யாசங்கள் பிரதானமாக உபயோகப்படுத்தப்படுவதால், மேலே கூறப்பட்ட கோட்பாடுகளில் 7 வது கோட்பாட்டை விசேஷமாக வற்புறுத்துவது அவசியமாகும்.

# தமிழ்நாடு தொ. ச. காங்கிரஸ் கோவை முடிவுகள்

[கே- டி. கே. தங்கமணி]

*கோவையில் நடைபெற்ற தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸின் சென்ற நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில் 26-6-53ல் 25 தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.*

தோழர்கள் ஸ்டாலின், கோட்வால்ட், எஸ். வி. தேஷ்பாண்டே ஆகியோர் மரணம் குறித்து அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. அமெரிக்க சர்க்கார் சமாதான வீரர்களான ரோசன் பர்க் தம்பதிகளை மின்சார நாற்காலியிலிட்டுக் கொன்றதைக் கூட்டம் கண்டித்தது. உலக சமாதான இயக்கத்தின் கீழ் ஒன்றுபட்டுநிற்பது என்றும், சமீபத்தில் புடாபெஸ்டில் கூடிய உலக சமாதானக் கவுன்சில் விடுத்துள்ள அறைகூவலை நடைமுறைக்குக் கொண்டுவரப் பாடுபடுவது என்றும் தமிழ்நாடு தொழிற் சங்க காங்கிரசின் சார்பாக கூட்டம் சபதம் எடுத்தது.

### அரசியல் கைதிகளை விடுதலை செய்

தமிழ்நாடெங்கிலும் உள்ள தண்டிக்கப்பட்ட அரசியல், தொழிற் சங்க தலைவர்கள் விடுதலை செய்யப்பட வேண்டுமென்றும், ராமநாதபுரம், திருநெல்வேலி சதி வழக்குகள் வாபஸ் வாங்கப் படவேண்டுமென்றும் கூட்டம் கோரியது. பொதுக்கூட்டம் ஊர்வலம் நடத்த போடப் பட்டுள்ள தடைகளைக் கண்டித்தும், ரோசன்பர்க் தம்பதிகள் கொலை சம்பந்தமாக சென்னையில் நடைபெற்ற ஆர்பாட்டத்திற்காக சட்டவிரோதமாக தொழிற்சங்க ஆபீஸ்களை சோதனையிட்டதையும் கைது செய்ததையும் கண்டித்தும் கூட்டம் தீர்மானம் நிறைவேற்றியது.

உலகத் தொழிற்சங்க சம்மேளனம் 1945ல் ஆரம்பிக்கப்பட்டது முதல் அது தமிழ்நாடு தொழிலாளர் இயக்கத்திற்கு ஒத்தாசையாக இருந்துவந்துள்ளது. அப்படிப்பட்ட உலகத் தொழிற்சங்க சம்மேளனத்தின் பின்னால் தமிழ்நாடு தொழிலாளிகள் ஒன்று திரள வேண்டுமென்று கூட்டம் வேண்டுகோள்விடுத்தது. வியன்னாவில் 10-10-53ல் நடைபெறப் போகும் ஐக்கிய மகாநாட்டை கூட்டம் வரவேற்றது. மேலும் தொழிற்சங்கவாதிகள் உலகத் தொழிற்சங்கத்தின் அறைகூவலை தொழிலாளர் மத்தியில் பரப்ப வேண்டுமென்றும், ஆகஸ்டு 3 முதல் 10 வரை உலகத் தொழிற் சங்க சம்மேளன வாரம் கொண்டாட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டது.

### மத்திய தொழிற்சங்க பள்ளி

அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் மத்திய தொழிற்சங்க காங்கிரஸ் பள்ளியை நடத்தத் தீர்மானித்திருப்பதை வரவேற்றும், அதற்குத் தமிழ்நாட்டிலிருந்து (1) எ. பாலசுப்ரமணியம், (2) டி. விருத்தகிரி, (3) பி. கல்யாண சுந்தரம், (4) சென்னையிலிருந்து ஒரு தோழர் ஆகியோர்களை அனுப்புவதென்று தீர்மானிக்கப்பட்டது.

தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரசுடன் இணைக்கப்பட்ட சகல தொழிற்சங்கங்களும் இணைப்புக் கட்டணத்தையும் தங்களுடைய மாதாந்திர நன்கொடைகளையும் அனுப்பவேண்டும் என்று கூட்டம் அவைகளை கேட்டுக் கொண்டுள்ளது. மேலும் தமிழ்நாடு தொழிற் சங்க காங்கிரசின் 4வது மகாநாட்டை இவ்வருடம் நவம்பர் மாதத்தில் நடத்துவது என்றும் கூட்டம் முடிவு செய்தது.

### ஜூலை 19 ஆர்ப்பாட்டம்

நிர்வாகக் கமிட்டி கூட்டம் வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னையை விரிவாகவும், தெளிவாகவும் விவாதம் செய்து அதைப் போக்க தமிழ் நாடெங்கிலும் தொழிலாளிகள் ஒன்றுபட வேண்டுமென்றும், ஜூலை 19ஐ வேலையில்லாத் திண்டாட்ட எதிர்ப்பு தினமாகக் கொண்டாட வேண்டுமென்றும் முடிவு செய்தது (இது சம்பந்தமாக விளக்கமான கட்டுரை ஏற்கெனவே ஜனசக்தியில் வெளியிடப்பட்டுள்ளது).

கமிட்டி வேறொரு தீர்மானத்தில் புதிய கல்வித் திட்டத்தை கண்டித்துள்ளது. இந்தத் திட்டத்தின்படி சிறுவர், சிறுமிகள் மூன்று மணி நேரம் படிப்பது என்றும், பாக்கி நேரங்களில் ஜாதித் தொழிலை பழகவேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளது. இத்திட்டம் வாத்தியார்களின் வேலை நேரத்தை 5 மணியிலிருந்து 6மணியாக உயர்த்தியிருக்கிறது. பல அரசியல் கட்சிகளும், பல பிரபல காங்கிரஸ் தலைவர்களும்கூட இத்திட்டத்தை கண்டித்துள்ளனர். இத்திட்டம் அமுலுக்குக்கொண்டு வரப்படுவதற்கு முன்னால் சட்டசபையின் யோசனையோ வாத்தியார்கள் பெற்றோர்களின் யோசனையோ கோரப்படவில்லை. இது சம்பந்தமாக கண்டனம் தெரிவிக்கப்பட வேண்டுமென்று கமிட்டி கூட்டம் முடிவு செய்தது.

### நெருக்கடி

கடந்த 3 வருடத்திற்கு மேலாக மின்சார வெட்டினால் 50,000பஞ்சாலைத் தொழிலாளிகள் பாதிக்கப்பட்டுள்ளனர் என்பது எல்லோரும் அறிந்த விஷயம். சர்க்கார் மில் முதலாளிகளை நஷ்ட ஈடு கொடுக்கும்படி நிர்பந்திப்பதற்குப் பதிலாக அப்பிரச்னையைஅட்ஜூடிகேஷனுக்கு விட்டுள்ளது. அடிப்படை சம்பளம் பூராவையும் பஞ்சப்படியில் பாதியையும் சேர்த்து நஷ்டஈடாகக் கொடுக்கவேண்டுமென்று சகல இணைக்கப்பட்ட தொழிற் சங்கங்களும் கோரவேண்டும் என்று கமிட்டி கேட்டுக் கொண்டுள்ளது. உடனடியாக தற்காலீக நிவாரணம் பெறுவதற்காக இயக்கத்தை நடத்த வேண்டுமென்றும் அது கேட்டுக்கொண்டுள்ளது. முக்கூட்டுக் கமிட்டி விசாரணையை முடித்துவிட்டது. தொழிலாளர் மந்திரி உறுதியளித்திருந்த போதிலும் கமிட்டி தன்னுடைய ரிபோர்ட்டை இன்னும் வெளியிடவில்லை, சிபாரிசு வெளியிடப்பட வேண்டும் என்றும், அமுலாக்கப்பட வேண்டுமென்றும் கமிட்டிக் கூட்டத்தில் வற்புறுத்தப்பட்டது.

(9-ம் பக்கம் பார்க்க)

# திரு-கொச்சி காங்கிரஸ் படுதோல்வி

## மந்திரி சபையின் அடித்தளத்திலே ஆட்டம்

திரு-கொச்சியில் காங்கிரஸ் படுதோல்வி அடைந்துவிட்டது. மொத்தமுள்ள 535 பஞ்சாயத்துக்களில் 241-ல்தான் காங்கிரஸிற்கு வெற்றி.

மொத்தமுள்ள 535 பஞ்சாயத்துக்களில், 241-ல்தான் காங்கிரஸிற்கு மெஜாரிடி கிடைத்தது. 197 பஞ்சாயத்துக்களில் ஐக்கிய முன்னணியால் ஆதரிக்கப்பட்ட சுயேச்சைகளுக்கு மெஜாரிடி கிடைத்தது. பாக்கியுள்ள பஞ்சாயத்துக்களில் யாருக்கும் மெஜாரிடி இல்லை.

காங்கிரஸிற்கு மொத்தமுள்ள ஸ்தானங்களில் 1994-ம், ஐக்கிய முன்னணிக்கும் அதன் ஆதரவாளர்களுக்கும் 1908 ஸ்தானங்களும், திரு - தமிழ்நாடு காங்கிரசிற்கும் 263-ம், பிரஜா சோஷியலிஸ்டுகளுக்கு 108ம் புரட்சி சோஷியலிஸ்டுக் கட்சிக்கும் 43-ம் கேரள சோஷியலிஸ்டுகளுக்கு 4-ம் கொச்சின் கட்சிக்கு 1-ம் கிடைத்துள்ளன.

போலீஸ் குறுக்கீடும், அதிகாரிகள் தலையீடும், அடக்குமுறையும் இல்லை என்றால் காங்கிரஸ் இந்த அளவு ஸ்தானங்களைக் கூடப் பெற்றிருக்க முடியாது.

இவ்விதம் திரு-கொச்சியில் காங்கிரஸ் படுதோல்வி அடைந்தது. இதன் காரணமாக இன்று திரு-கொச்சி கூட்டு மந்திரி சபைக்குள் ஒரு பெரும் நெருக்கடி ஏற்பட்டுள்ளது.

### கோட்டைக்குள் குத்துவிட்டு

காங்கிரஸிற்கு ஏற்பட்ட தோல்விக் காரணம் திரு-தமிழ்நாடுக் காங்கிஸுடன் கூட்டு மந்திரி சபை ஏற்படுத்தியதுதான் என்று காங்கிரஸிலுள்ள ஒரு கோஷ்டி கூறுகிறது. கும்பளத்து சங்குப் பிள்ளை இதன் தலைவர். திரு-தமிழ்நாடு காங்கிரசை மந்திரி சபையிலிருந்து, வெளியேற்றினால் காங்கிரஸ் மந்திரி சபைக்கே ஆபத்து ஏற்படும் என்பதை உணரும் காங்கிரஸ் தலைவர்கள் இந்த நடவடிக்கையை ஒத்தி வைத்துள்ளனர். அதே சமயத்தில் சமீபத்தில் பாலக்காடு காங்கிரஸ் மாநாட்டில் திரு-கொச்சியை எஞ்சிய சென்னையுடன் சேர்த்து தட்சிண ராஜ்யம் ஏற்படுத்துவது என்று எடுத்த முடிவு திருவாங்கூர் தமிழரிடையே பெரும் எதிர்ப்பை ஏற்படுத்தியுள்ளதால் திரு-தமிழ்நாடு காங்கிரஸ் மந்திரி சபையிலிருந்து வெளியேற வேண்டுமென்ற கிளர்ச்சியும் வலுத்து வருகிறது.

இவ்விதம் உள் நெருக்கடியாலும், மக்கள் வெறுப்பாலும் பலத்த ஆட்டங் கொண்டுள்ள மந்திரி சபைக்கு எதிராக கூட்டங்களும் ஆர்பாட்டங்களும் நடக்கின்றன. திரு-கொச்சியின் சரித்திரமே கண்டிராத விதத்தில் சமீபத்தில் தோழர் ஏ. கே. கோபாலன் பேசிய கூட்டங்களில் மக்கள் திரண்டு "ஒழிக மைனாரிடி மந்திரி சபை" என்று முழங்கினர். இந்த எதிர்ப்பு மேலும் மேலும் வளர்ந்து வருகிறது.

# காங்கிரஸ் ரத்தக் காட்டேறிகளுக்கு 7 பேர் பலி

## பர்ன்பூர் தொழிலாளர்மீது துப்பாக்கிப் பிரயோகம்



பர்ன்பூர் இந்திய இரும்பு உருக்குக் கம்பெனித் தொழிலாளர்கள் மீது ஜூலை 5ம் தேதியன்று போலீஸ் நடத்திய மிருகத் தனமான துப்பாக்கிப் பிரயோகத்தால் ஏழு தொழிலாளர்கள் கொலைசெய்யப்பட்டார்கள். இன்னும் பலர் படுகாயமடைந்தனர். இரண்டுபேர்கள் துப்பாக்கி சனியனுல் குத்திக் கொல்லப்பட்டார்கள். (செய்திச் சுருக்கம் கடந்த வார ஜனசக்தியில் வெளியாகியுள்ளது.)

நூற்றுக்கு அதிகமான செயல் கமிட்டி உறுப்பினர்கள் கைது செய்யப்பட்டதை ஆட்சேபித்து சுமார் 5000 தொழிலாளர்கள் ஊர்வலமாகச் சென்று எஸ்.டி.ஓ. பங்களாவை அடைந்தனர். தம் தலைவர்களை விடுதலை செய்ய வேண்டுமென்று கோரிய தொழிலாளர்கள் மீது போலீஸ் தடி கொண்டு தாக்கியது. கண்ணீர்ப் புகை குண்டுகளை வீசியது. துப்பாக்கிப் பிரயோகம் நடத்தியது. 7பேர் கொல்லப்பட்டார்கள். பலர் படுகாயமடைந்தனர்.

மிருகத் தனமான இந்தப் படுகொலையைக் கண்டித்து உடனடியாக பர்ன்பூர் பூராவும் பரிபூரண ஹர்த்தால் நடைபெற்றது. இதற்கு மறுநாள் அசன்சால்-குல்டி பிரதேசம் பூராவிலும் தொழிலாளர்கள் பொதுவேலை நிறுத்தம் செய்தனர். ஒன்பது தொழிலாளர் யூனியன்களும், இன்னும் இதர ஸ்தாபனங்களும் இந்தப் படுகொலையைக் கண்டித்துக் கூட்டறிக்கை விடுத்துள்ளன. போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததைப் பகிரங்க விசாரணை நடத்த வேண்டுமென்று மேற்குவங்க கம்யூனிஸ்ட் கட்சி கோரியுள்ளது.

14,000 பர்ன்பூர் தொழிலாளர்களின் இந்த மகத்தான போராட்டம் ஜனவரி 23ம் தேதியன்று ஆரம்பமாயிற்று. வாரம் பூராவும் வேலை கொடுக்கப்பட வேண்டுமென்றும், அதிக போனஸ் கோரியும், பழி வாங்கப்பட்ட தொழிலாளர்கள் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டுமென்றும் தொழிலாளர்கள் கோரினர். இந்திய தேசியத் தொழிற்சங்கத்தில் இணைக்கப்பட்டிருக்கும் இந்த தொழிலாளர் யூனியன் தலைவர்கள் தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளுக்காகப் பாடுபட மறுத்தனர்.

எனவே தொழிலாளர்கள் செயல் கமிட்டியைத் தேர்ந்தெடுத்து அதன் தலைமையின்கீழ் கிளர்ச்சி செய்யத் தொடங்கினர். மார்ச் 9ம் தேதியன்று கம்பெனி நிர்வாகிகள் தாக்குதல் தொடுத்தனர். 500 தொழிலாளர்கள் சஸ்பெண்டு செய்யப்பட்டார்கள். 8000 தொழிலாளர்கள் திரண்ட பொதுக்கூட்டம் நிர்வாகத்தின் இச்செய்கையைக் கண்டித்தது.

ஏப்ரல் 10ம் தேதியன்று 500 தொழிலாளர்களை கம்பெனி நிர்வாகம் மேலும் பழிவாங்கியது. இதைக் கண்டித்து உடனடியாக 11,000 தொழிலாளர்கள் உள்ளிருப்பு வேலைநிறுத்தமும் ஆர்ப்பாட்டமும் செய்தனர்.

### போராட்ட செயல் கமிட்டி

தங்களின் இந்தப் போராட்டத்திற்குத் தலைமை தாங்கி நடத்துமாறு ஏப்ரல் 14ம் தேதியன்று ஐ. என். டி. யு. சி. தொழிற் சங்கத் தலைவர்களைத் தொழிலாளர்கள் வேண்டிக் கொண்டனர். ஆனால் வேண்டுகோளை யூனியன் தலைவர்கள் நிராகரித்து விட்டனர். இதன் விளைவாக ஒவ்வொரு டிபார்ட்மென்டையும் பிரதிநிதித்துவப் படுத்தும் ரீதியில் 200 பேர் கொண்ட செயல்கமிட்டியைத் தொழிலாளர்கள் தேர்ந்தெடுத்தனர். போராட்டத்திற்கு செயல் கமிட்டித் தலைமை தாங்கியது. யூனியன் தலைவர்களின் துரோகத் தனத்தைக் கண்டித்து, அவர்கள் உடனே தம் பதவிகளை ராஜினாமா செய்யவேண்டுமெனக் கோரி 14,000 தொழிலாளர்களும் மகஜரில் கையொப்பமிட்டனர்.

சென்ற மாத இறுதியில் யூனியன் ஆபீசிற்கு ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் சென்று, தொழிலாளர் துரோகிகள் தம் பதவிகளை ராஜினாமா செய்யவேண்டுமென்று கோரினர். இந்த ஆர்ப்பாட்டக்காரர்கள்மீது போலீஸ் தடியடிப் பிரயோகம் செய்தது. தொழிலாளர்களிடமிருந்து தொழிற் சங்கத் 'தலைவர்களை'க் காப்பாற்ற முன் வந்தது. இந்த தடியடிப் பிரயோகத்தைக் கண்டித்து 10,000 தொழிலாளர்கள் மேலும் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

செயல் கமிட்டியின் தலைமையின் கீழ் ஜூன் 23-ம் தேதியிலிருந்து தொழிற்சாலை பூராவிலும் மெதுவாக வேலை செய்யும் போராட்டம் ஆரம்பமாயிற்று. இந்தப் போராட்டத்தை நசுக்க செயல் கமிட்டி உறுப்பினர்களில் 100 பேர்களுக்கு மேல் போலீஸ் கைது செய்தது. இவர்களின் விடுதலை கோரிய தொழிலாளர்கள் மீது தான் காங்கிரஸ் மந்திரி சபை துப்பாக்கிப் பிரயோகம்செய்து 7 பேர்களைக் கொலை செய்திருக்கிறது.

# வேலையில்லாத்...

## தமிழ்நாடு தொழிற்சங்... தலைவர்கள் அறை...

தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் செயலாளர் தோழர் சைமன் பால், உபதலைவர்களா... தோழர் கே, டி. கே. தங்கமணி, எஸ். கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்துள்ளனர்:

தமிழ் நாடு தொழிற் சங்க காங்கிரஸின் நிர்வாகக் கமிட்டி 26-6-53ல் கோவையில் நடைபெற்றது. ஜூலை 19ஐ "வேலையில்லாத் திண்டாட்ட எதிர்ப்பு" நாளாகக் கொண்டாட வேண்டுமென்று அது தன்னுடன் இணைக்கப்பட்ட தொழிற் சங்கங்களையும் தமிழ் நாட்டுத் தொழிலாளிகளையும் கேட்டுக் கொண்டுள்ளது.

தமிழ் நாட்டில் தொழில்களில் நெருக்கடி முற்றி வருகிறது. உற்பத்தி குறைவு, தொழிற் சாலைகள் மூடப்படுவது இவைகளிலிருந்து இதைக் காண முடியும். தொழிலாளிகள் வேலையை விட்டு நீக்கப் படுகின்றனர். வேலையில்லாத்திண்டாட்டம் தொழிலாளி வர்க்கத்தையும் விவசாயிகளையும், படித்த வர்க்கத்தினரையும் பாதிக்க ஆரம்பித்துவிட்டது. இது எந்த அளவிற்கு முற்றியிருக்கிறது என்றால் சர்க்கார் கட்சி கூட இது முக்கிய பிரச்னை யாகியுள்ளது என்று ஏற்றுக்கொள்ளவேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளது.

மின்சாரவெட்டின் காரணமாக சென்ற மாதக் கடைசிவரை தமிழ்நாட்டில் 50,0... பஞ்சாலை தொழிலாளிகள் ... பாதிக்கப்... டார்கள். இதன் காரணமாக ... தத் தொழிலா...ளுக்கு ஏரா... மான கடன் ...ற்பட்டுள்ள... லட்சக்கணக்கான கைத்தறி ... வாளர்கள் வே...யில்லாமலே... அல்லது குறைந்த அளவு வே... கிடைப்பதினுலே ... கஷ்டப்... கிறார்கள். ஆயி...க் கணக்கா... கைத்தறிகள் அ...ந்து கிடக்கி... றன. கஞ்சித் ... தொட்டி... அமைப்பதின் மூ...மாக சர்க்... அளித்துவந்த ...காஞ்ச அ... நிவாரணமும் நி...த்தப்பட்டுவி... டது. சுருட்டு, பீ..., முதலிய ... தொழில்களில் ...தொழிலாளர்... கொஞ்ச அளவு ...வேலையினுல் க... டப்படுகிறார்கள். ...தால்பதனி... தொழிலாளிகளு... அடிக்... ஒரு குறிப்பிட்... காலத்தி... வேலை கிடைக்கா... கஷ்டம் எ... நோக்கியுள்ளது. ... படிப்படிய... அவர்கள் ...னக்...யாக மாற்... பட்டு வருகின்ற...

பிரிட்டிஷ் மு...ளிகள் தா... தலை தொடுத்...ளனர். பா... கம்பெனி நிர்வா... புகளூர் ச... கரை ஆலையை மூ... 600 தொ... லாளிகளை வயிற்...ல் அடித்து... ளது. ஜான் பெ...ர் அன்ட் ... பெனி உரிகம் ...க சுரங்கத்... மூடிவிட்டு 3,50... தொழிலா... களை வயிற்றில் ...த்துள்ளன... பூருக்ஸ் சென்னை டிராம்வே... மூடி 1,600 தொழி...ளிகள் வயி... றில் மண்ணை ...த்துள்ளா... ஹார்வி மில் நி...கம் மது... விக்கிரமசிங்கபுரம் ...ஆத்துக்கு... யில் 500 தொழி...ளிகளை ப... வாங்கிவிட்டு இப்...து மீண்... வேலைக்கு எடுத்...க் கொள்... மறுக்கின்றனர். ...தன் பிர... திய ரயில்வேயில் ...துகாப்பு வி... களின்படி நீக்க...ட்ட 3... தொழிலாளி...ள் இன்னு... வேலைக்கு எடுத்...கொள்ளப்... வில்லை. தாழையூ...து சிமிண்... தொழிற்சாலையில் ...00 தொழி... ளிகள் "அன்பிட்" என்ற பெ... யான காரணத்தின் பேரில் நீக்க... படுகின்றனர். டி...வி. எஸ். ... பெனியில் இன்னு... 300 தொ... லாளிகள் வேலை...த எடுத்... கொள்ளப்படவில்... பஸ் ... லாளிகள் ஆட்குறை...பு என்பதி... பெயரால் கேள்வி முறையின்... தொழிலாளிகளை ...வாங்கி வ... கிறார்கள். ஜில்...க தலை... ஸ்தலங்களிலும், ...சென்னையி... அனேக அச்சகங்...ள் மூடப்... கின்றன. தோட்ட தொழிலா... களிடத்திலும், நகா...த்தித்தொ... லாளிகளிடத்திலும் ...மிகக்குறை... சம்பளத்திற்கு ...கிகபட்ச... வேலை வாங்கப்...கிறது. மி... சாரத் தொழி...ளிகள் ஆ... குறைப்பு செய்ய...படுகின்றன... தொழிற்சாலைத் தொழிலா... களின் நிலைமை இ...தான்.

கிராமங்களில் ...ச நிலை... இதன் காரணமா... விவசா... தொழிலாளிகளு...ம் ஏழை வ... சாயிகளும் நகரத்...ை நோக்கி வ... கின்றனர். இதனு...ை வேலையில்... தோர் பட்டாளம் ...ன்னும் பெ... குகிறது.

### அடிப்படைக் காரணம்

தொழில்களில் நெருக்கடி... இதன் காரணமாக வேலையில்ல... திண்டாட்டமும் ஏற்பட்டிரு... தற்கு அடிப்படை...ன காரண... அன்னிய மூலத...த்தை இ... னும் ஆதிக்கத்தில் ...விட்டுவைக்... சர்க்கார் கொள்கை...ாகும். இத... காரணமாக நம... ...தேசிய... தொழில்கள் வளர...டியவில்லை... விவசாயிகளை ...ஓட்டாண்... ளாக்கும் பழைய ...லப்பிரபுத்...

# பிரிட்டிஷ் டிராம்வேக்கு எதிராக கல்கத்தா எழுந்தது!

## வெள்ளை முதலாளிக்கு வெள்ளைக் குல்லாய் பாதுகாப்பு

## போலீஸ் துப்பாக்கிப்பிரயோகம்—1700 பேர் கைது

கல்கத்தா டிராம்வேக்களில் இரண்டாம் வகுப்புக் கட்டணம் உயர்த்தப்பட்டதை எதிர்த்து நகரம் பூராவும் பிரம்மாண்டமான கண்டனக் கிளர்ச்சி ஆர்ப்பாட்டங்கள் நடத்தப்படுகின்றன. மக்களின் நியாயமான இயக்கத்தை நசுக்கி, வெள்ளை முதலாளிகளின் லாபக் கொள்ளையை பாதுகாப்பதற்காக, காங்கிரஸ் ஆட்சியாளர்கள் மிருகத்தனமான அடக்குமுறையில் இறங்கியுள்ளனர். முதல் ஆறு நாட்களில் மாத்திரம் போலீஸ் 11 தடவை துப்பாக்கிப் பிரயோகம் செய்துள்ளது. ஒரு சிறுவன் உள்பட பலர் துப்பாக்கிக் குண்டுக் காயம் பட்டுள்ளனர். 80 தடவைக்குமேல் கண்ணீர்ப்புகைக் குண்டுகள் வீசப்பட்டன. இதன் விளைவாக ஒரு கிழவி திக்குமுக்காடி மரணமடைய நேரிட்டது. மொத்தம் 1,700 பேர்கள் கைதுசெய்யப்பட்டனர்.

முதல் ஆறு நாட்களில் மொத்தம் 50 வீடுகளும், ஆபீஸ்களும் சோதனை யிடப்பட்டன. ஒரு ரூபாய் முதல் 20 ரூபாய் வரைக்கும் மொத்தம் 138 பேர்களுக்கு அபராதம் விதிக்கப்பட்டது.

கல்கத்தா நகரில் 144 தடை உத்தரவு விதிக்கப்படவில்லை. இருந்த போதிலும் சிறுசிறு கூட்டங்களாகக் கூடினுல்கூட போலீஸின் ஈவு இரக்கமற்ற கொடுந்தாக்குதலுக்கு பொதுமக்கள் இரையாகி வருகின்றனர். அஷுடோஷ் கல்லூரிக்குள் போலீஸ் அக்கிரமமாக நுழைந்து மாணவர்களைத் தடிகொண்டு தாக்கிப் படுகாயப் படுத்தியுள்ளது.

காங்கிரஸ் தவிர இதர எல்லா அரசியல் கட்சித் தலைவர்களும் கைது செய்யப்பட்டுள்ளனர். மேற்கு வங்க சட்ட சபையின் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரும் எதிர்கட்சித் தலைவருமான தோழர் ஜோதிபாசு பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் கைது செய்யப்பட்டிருக்கிறார். இதே போல பிரஜா-சோஷலிஸ்ட் கட்சித் தலைவர்களும் இதரர்களும் கைதியாகியுள்ளனர்.

டிராம் கட்டண உயர்வை எதிர்ப்பதற்காகக் காங்கிரஸ் தவிர இதர எல்லா அரசியல் கட்சிகளும் அடங்கிய இயக்கம் ஜூலை முதல் தேதியன்று ஆரம்பமாயிற்று. அதிகமாகக் கட்டணம் கொடுக்க முடியாதென பொதுஜனங்கள் மறுக்க வேண்டுமென்று கட்டண உயர்வு எதிர்ப்புக் கமிட்டி அறைகூவல் விடுத்தது. கமிட்டியின் இந்த வேண்டுகோளைப் பொது மக்கள் உற்சாகமாக வரவேற்றனர்.

கல்கத்தா டிராம்வே கம்பெனி 1886-ல் நிறுவப்பட்டது. இதுவரை மொத்தம் ரூ. 10 கோடி ரூபாய்களை அது லாபமாக இங்கிலாந்திற்கு மூட்டை கட்டி அனுப்பியிருக்கிறது. முதல் வகுப்புக் கட்டணம் 1949ல் பெருத்த பொதுஜன எதிர்ப்பிற் கிடையிலே உயர்த்தப்பட்டது. 1950ஐக் காட்டிலும் இந்த வருடம் டிராம்வே கம்பெனிக்கு $4\frac{1}{4}$ லட்சம் ரூபாய் லாபம் அதிகமாகக் கிடைத்திருக்கிறது.

இரண்டாம் வகுப்புக் கட்டணம் உயர்த்தப்படுவதின் மூலம் இந்த லாபக்கொள்ளை மேலும் அதிகரிக்கும். வெள்ளை முதலாளியின் இந்த ஜன விரோத சதிச்செயலுக்கு காங்கிரஸ் மந்திரி சபை ஆதரவளிக்கிறது. பொதுஜன இயக்கத்தை பகிரங்கமாகவே முதலமைச்சர் டாக்டர் பி. சி. ராய் கண்டிக்க முன்வந்துள்ளார்.

1902ல் 133 லட்ச ரூபாய் மூலதனத்தைப் பெற்றிருந்த டிராம்வே கம்பெனியின் இன்றைய மூலதனம் 499லட்சரூபாய்களாக அதிகரித்திருக்கிறது. இது தவிர 125லட்சரூபாய்கள் ரிஸர்வ் நிதியாக ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கிறது.

டிக்கட் விற்பனையின் மூலமாக மட்டும் கம்பெனிக்கு வரக்கூடிய வருமானத்தில் 5 லட்ச ரூபாய்கள் அதிகரித்திருக்கின்றன. 1950ம் வருட மார்ச் மாதத்தில் கம்பெனிக்கு வருமானம் ரூ. 15,43,000 ஆனுல்1953ம் வருட மார்ச் மாதத்தில் வருமானம் ரூ. 20,42,657.

வெள்ளை முதலாளிகளின் இந்த லாபக்கொள்ளையை கட்டிக் காப்பதற்கும், அதை மேலும் அதிகப் படுத்துவதற்கும் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் மான வெட்கமின்றி பகிரங்கமாக முன்வந்துள்ளனர்.

பிரிட்டிஷ் வெள்ளை மூலதனத்தின் இந்த அக்கிரமப் போக்கிற்கு எதிராக சர்வஜனப் பகுதிகளும் ஒன்றுபட்டு, சமாதானமான முறைகளில் கிளர்ச்சி செய்துவருகின்றனர். டிராம்வே தொழிலாளர்களுக்கும் பொதுமக்களுக்குமிடையே மிக நெருக்கமான ஒற்றுமைக் கட்டி வளர்க்கப்பட்டிருக்கிறது.

துப்பாக்கிக் குண்டுகளையும், குறுந்தடியையும் மீறி பொதுஜன இயக்கம் மேலும் பாவி வருகிறது.

# டில்லி பஞ்சாலை யூனியன்கள் ஐக்யமாகின்றன

செங்கொடியின்கீழ் அணிவகுத்திருக்கும் டில்லி ராஜ்ப பஞ்சாலை தொழிலாளர் சங்கத்தின் ஜெனரல் பாடிக் கூட்டம் ஜூலை 5ல் நடந்தது 2000 அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள். டில்லியிலுள்ள 4 பஞ்சாலை யூனியன்களும் ஐக்கியப்படுவதற்காக ஏற்படுத்திக்கொண்ட நிபந்தனைகளை அப்படியே ஏற்றுக் கொள்ளுவதென ஏகமனதாக தீர்மானித்தார்கள்.

2 மாதங்களுக்கு முன்னுல் ஹிந்து மஸ்தூர் சபா தலைமையின் கீழ் உள்ள டெக்ஸ்டைல் மஸ்தூர் சங்கமும், ஐ.என்.டி.யு.ஸி. தலைமையிலுள்ள டெக்ஸ்டைல் லேபர் யூனியனும், பாபாராம் சந்தர் என்ற ஒரு தலைவரின் கீழ் உள்ள சங்கமும், அ. இ. தொழிற்சங்க காங்கிரஸ் தலைமையிலுள்ள டில்லி ராஜ்ய டெக்ஸ்டைல் மில் மஸ்தூர் சபா—ஆகிய 4 சங்கப் பிரதிநிதிகளும் கூடி, ஒரே யூனியனுக இயங்க வேண்டியதின் அவசர அவசியத்தைப் பற்றி விவாதித்து கீழ்க்கண்ட தீர்மானங்களை நிறைவேற்றினுர்கள்.

### ஐக்கியத்தின் அடிப்படை

இந்த ஐக்கியப்பட்ட சங்கத்தை எந்தவொரு அரசியல் கட்சியுடனே குரூப்புகளுடனே இணைக்கக் கூடாது. சங்கத்தின் மேடையை எந்தவொரு அரசியல் கட்சியின் கருத்துக்களைப் பிரச்சாரம் செய்ய பயன்படுத்திக் கொள்ளக்கூடாது.

★ எந்த அரசியல் அபிப்பிராய முடைய தொழிலாளர்களாயிருந்தாலும்சரி, அவர்கள் சங்கத்தில் சேரவும், தேர்ந்தெடுக்கவும், தேர்ந்தெடுக்கப்படவும் முழு உரிமையும் இருக்கவேண்டும்.

★ தேசியப் பிரச்னைகளைப் பற்றியோ, சர்வதேசப் பிரச்னைகளைப் பற்றியோ தீர்மானங்கள் நிறைவேற வேண்டுமானுல் முக்கால்வாசி அங்கத்தினர்கள் ஆதரிக்கவேண்டும்.

★ ஜனநாயக பூர்வமாக சங்கத்தை நடத்தவேண்டும்.

★ நாலு யூனியன்களிலிருந்தும், யூனியனுக்கு 5 பிரதிநிதிகள் வீதம் சேர்ந்து, ஒரு மாகாண கமிட்டி அமைக்கப்படும். இவர்கள் கூட்டாக அங்கத்தினர் சேர்க்க முற்படுவார்கள். அதன் பின் ஒரு ஒற்றுமை மகாநாடு நடத்தப்படும்.

★ ஐக்கியப்பட்ட இந்தப்புதிய யூனியனின் நிர்வாகக் கமிட்டிக்கு நடைபெறும் தேர்தல், இதில் சேரும் சங்கங்களின் அங்கத்தினர் எண்ணிக்கைக்கு ஏற்றவாறு இருக்கும்.

ஒற்றுமை மகாநாட்டில்தான் மேற்கண்ட தீர்மானங்கள் ஒப்புக்



கொள்ளப்படவேண்டும்; புதிய நிர்வாகஸ்தர்களும் தேர்ந்தெடுக்கப் படவேண்டும்.

செங்கொடிச் சங்கத்தின் பொதுச்சபை கூட்டம் மேற்கண்ட தீர்மானங்களை ஒப்புக் கொண்டுவிட்டது. மற்ற சங்கங்களும் அவ்வாறே ஒப்புக்கொள்ளும்.

பாபா ராம்சந்தர், பி.டி. ஜோஷி (சோஷலிஸ்ட் யூனியன் தலைவர்) இ. தே. தொ. ச. யூனியன் காரியதரிசி சோம்பிரகாஷ், அ.இ. பாங்க் ஊழியர் சங்க உப-தலைவர் பார்வானு, மற்றும்பல தொழிற்சங்கத் தலைவர்கள் ஒற்றுமையை வலியுறுத்தி பேசினுர்கள்.

தமிழ்நாட்டுத் தொழிலாளர்களே!

# ...பில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க ஒன்றுதிரளுக!

## ...தொழிற்சங்க காங்கிரஸ் ...ர்கள் அறைகூவல்

...க காங்கிரஸ் செயலாளர் ...தலைவர்களா[ன] தோழர் ...ஸ். கிருஷ்ண[மூ]ர்த்தி ஆகி ...கயை விடுத்[து]ள்ளனர்:

...நாட்டில் 50,0[00] பஞ்சாலைத் ...தொழிலாளிகள் பாதிக்கப்பட் ...டார்கள். இதன் [கா]ரணமாக இங் ...கத் தொழிலா[ளி]களுக்கு ஏராள ...மான கடன் [ஏ]ற்பட்டுள்ளது. ...லட்சக்கணக்கான ...கைத்தறி நெச ...வாளர்கள் வே[லை]யில்லாமலோ, அல்லது குறைந்த அளவு வேலை ...கிடைப்பதினுலே[யோ] கஷ்டப்படு ...கிறார்கள். ஆ[யிர]க் கணக்கான ...கைத்தறிகள் அ[மு]ந்து கிடக்கின் ...றன. கஞ்சித் தொட்டியை அமைப்பதின் மூ[ல]மாக சர்க்கார் அளித்துவந்த ...காஞ்ச அளவு ...நிவாரணமும் நி[று]த்தப்பட்டுவிட் ...டது. சுருட்டு, பீ[டி], முதலிய சிறு தொழில்களில் [தொ]ழிலாளர்கள் கொஞ்ச அளவு [வே]லையினுல் கஷ் ...டப்படுகிறார்கள். [இ]தால்பதனிடும் தொழிலாளிகளு[க்கு] அடிக்கடி ஒரு குறிப்பிட்[ட] காலத்திற்கு வேலை கிடைக்கா[த] கஷ்டம் எதிர் நோக்கியுள்ளது. படிப்படியாக அவர்கள் ...யாக மாற்றப் ...பட்டு வருகின்ற[னர்].

பிரிட்டிஷ் மு[தலா]ளிகள் தாக்கு ...தலை தொடுத்து[ள்ள]னர். பாரிக் ...கம்பெனி நிர்வா[கம்] புகளூர் சர்க் ...கரை ஆலையை மூ[டி] 600 தொழி ...லாளிகளை வயிற்[றி]ல் அடித்துள் ...ளது. ஜான் டெ[ய]ர் அன்ட் கம் ...பெனி உரிகம் [தங்]க சுரங்கத்தை ...மூடிவிட்டு 3,50[0] தொழிலாளி ...களை வயிற்றில் [அடி]த்துள்ளனர். ...புரூக்ஸ் சென்[னை] டிராம்வேயை ...மூடி 1,600 தொழி[லா]ளிகள் வயிற் ...றில் மண்ணை [அடி]த்துள்ளான். ...ஹார்வி மில் நி[ர்வா]கம் மதுரை, ...விக்கிரமசிங்கபுரம், [தூ]த்துக்குடி ...யில் 500 தொழி[லா]ளிகளை பழி ...வாங்கிவிட்டு இப்[போ]து மீண்டும் ...வேலைக்கு எடுத்[து]க் கொள்ள ...மறுக்கின்றனர். [தெ]ன் பிராந் ...திய ரயில்வேயில் [பா]துகாப்பு விதி ...களின்படி நீக்க[ப்ப]ட்ட 300 ...தொழிலாளி[க]ள் இன்னும் ...வேலைக்கு எடுத்[துக்] கொள்ளப்பட ...வில்லை. தாழை[யூ]த்து சிமிண்ட் ...தொழிற்சாலையில் [3]00 தொழிலா ...ளிகள் "அன்பிட்[டர்]" என்ற பொய் ...யான காரணத்தின் பேரில் நீக்கப் ...படுகின்றனர். டி. [வி]. எஸ். கம் ...பெனியில் இன்னு[ம்] 300 தொழி ...லாளிகள் வேலை[க்]கு எடுத்துக் ...கொள்ளப்படவில்[லை]. பஸ் முத ...லாளிகள் ஆட்குறை[ப்]பு என்பதின் ...பெயரால் கேள்வி முறையின்றி ...தொழிலாளிகளை ...வாங்கி வரு ...கிறார்கள். ஜில்லா[த்] தலைமை ...ஸ்தலங்களிலும், சென்னையிலும் அனேக அச்சகங்க[ள்] மூடப்படு ...கின்றன. தோட்ட[த்] தொழிலாளி ...களிடத்திலும், நக[ரத்]த்தித்தொழி ...லாளிகளிடத்திலும் மிகக்குறைந்த ...சம்பளத்திற்கு அ[தி]கபட்சம் ...வேலை வாங்கப்ப[டு]கிறது. மின் ...சாரத் தொழில[ா]ளிகள் ஆட் ...குறைப்பு செய்ய[ப்ப]டுகின்றனர். ...தொழிற்சாலைத் தொழிலாளி ...களின் நிலைமை இ[து]தான்.

...கிராமங்களில் ...ச நிலைமை. ...இதன் காரணம[ாக] விவசாயத் ...தொழிலாளிகளு[ம்] ஏழை விவ ...சாயிகளும் நகரத்[தை] நோக்கி வரு ...கின்றனர். இதனு[ல்] வேலையில்லா ...தோர் பட்டாளம் [இ]ன்னும் பெரு ...கிறது.

### அடிப்படைக் [கா]ரணம்

...தொழில்களில் [நெ]ருக்கடியும், ...இதன் காரணமாக வேலையில்லாத் ...திண்டாட்டமும் [ஏ]ற்பட்டிருப்ப ...தற்கு அடிப்படை[யா]ன காரணம், அன்னிய மூலத[னத்]தை இன் ...னும் ஆதிக்கத்தில் [வி]ட்டுவைக்கும் ...சர்க்கார் கொள்கை[யா]கும். இதன் ...காரணமாக நம[து] தேசீயத் ...தொழில்கள் வள[ர மு]டியவில்லை. ...விவசாயிகளை [ப]ட்டாண்டிக ...ளாக்கும் பழைய [நி]லப்பிரபுத்துவ

முறை தொடர்ந்து நீடித்து வருவதும் அன்னியப் போட்டியும் உள்நாட்டுச் சந்தையை குறைக்கின்றன.

முதலாளிகள் ஆட்குறைப்பு, கதவடைப்பு, போனஸ் கொடுக்க மறுப்பது, வேலைப்பளுவை அதிகரிப்பது போன்ற காரியங்களைச் செய்கிறார்கள். இதற்கு சர்க்காரின் கொள்கை ஆதரவாக உள்ளது. முதலமைச்சர் பகிரங்கமாக கேட்டுக்கொண்டபோதிலும் ஹார்விமில் நிர்வாகம் பழிவாங்கப்பட்ட தொழிலாளிகளை வேலைக்கு எடுத்துக்கொள்ள மறுக்கின்றனர். சென்னை நகர மக்களை பாதிக்கும் போக்குவரத்தில் நாசத்தை விளைவிக்கும் புரூக்ஸ் சம்பந்தமாக சர்க்கார் தொடை நடுங்கிக் கொள்கையைக் கடைப்பிடிக்கிறது.

### தொழிலாளிகள்மீது அடக்குமுறை

விக்கிரமசிங்கபுரம் பஞ்சாலைத் தொழிலாளிகளை பயமுறுத்த விசேஷ ஆயுதபோலீசை உபயோகிக்கின்றனர். கோவை மில் முதலாளிகள் கோர்ட் தீர்ப்பை துச்சமாக மதித்து போனஸ் கொடுக்க மறுக்கின்றனர். வேலை கொடுக்க முடியாது போனகாலத்திற்கு பஞ்சாலைத்தொழிலாளிகளுக்கு நஷ்ட ஈடு கொடுக்க வேண்டும் என்னும் கொள்கையை ஒப்புக்கொள்வதற்குப் பதிலாக சர்க்கார் இப்பிரச்னையை விசாரணை கோர்ட்டிற்கு விடுகிறது.

மின்சார இலாகா ஆட்குறைப்பு செய்வதை சர்க்கார் அனுமதிக்கிறது. மதுரை பஸ்தொழிலாளிகளை வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்வதற்குப் பதிலாக நஷ்ட ஈடு கொடுக்க வேண்டுமென்று அபிவிருத்தி இலாகா சிபாரிசு செய்கிறது.

### தாக்குதலை முறியடிக்க வழி

இந்தத் தாக்குதலை முறியடிக்க தமிழ் நாட்டுத் தொழிலாளி வர்க்கம் கூட்டாக ஒன்றுபட்ட நடவடிக்கை எடுக்க வேண்டியது அவசர அவசியம்.

ஆகவே ஜுலை 19 ஆர்ப்பாட்டத்தையும் அணிவகுப்பையும் வெற்றிகரமாக நடத்துங்கள்! சகல தொழிற் சங்கங்களையும், ஸ்தாபனரீதியாக திரண்டில்லாத தொழிலாளிகளையும் அணுகுங்கள்! எங்கெங்கு சாத்தியமோ அங்கங்கு கூட்டுக் கமிட்டிகளை அமையுங்கள்! விவசாயிகளை பங்கு கொள்ளச்செய்ய முடிந்தால் அதனுல் இன்னும் பலம் ஏற்படும். ஜுலை 19 கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்களை நிறைவேற்றி அவைகளை சர்க்காருக்கும், முதலாளிகளுக்கும் அனுப்புங்கள்:

### கோரிக்கைகள்

1. மூடப்பட்ட சகல தொழிற்சாலைகளும் உடனடியாக திறக்கப்படவேண்டும்.

2. மூடப்பட்ட பிரிட்டிஷ் கம்பெனிகளான டிராம்வேக் கம்பெனி, உரிகம் தங்க சுரங்கம், புகளூர் சர்க்கரை ஆலை ஆகியவற்றை சர்க்கார் நஷ்ட ஈடின்றி எடுத்துக் கொண்டு தொழிலாளிகளின் உதவியுடன் நடத்தவேண்டும்.

3. ஆட்குறைப்பு செய்யப்பட்ட சகல தொழிலாளிகளும் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட வேண்டும்.

4. பகுதி வேலையின்மையால் கஷ்டப்படுவோருக்கு ஒன்று நிவாரணம் அளிக்க வேண்டும் அல்லது நிவாரண விடுதிகள் திறக்கவேண்டும்.

5. தொழில் வளர்ச்சிக்காக குறுகிய காலத் திட்டம் கொண்டு வரவேண்டும்.

6. பஞ்சப் பிரதேசங்களில் வேலை கொடுக்கப்பட வேண்டும்.

7. மன்னார்குடி கிசான் சபை மகாநாட்டுத் தீர்மானங்களின் அடிப்படையில் நிலச் சீர்திருத்தம் செய்ய சர்க்கார் உடனே மசோதா கொண்டுவர வேண்டும்.

---

தென் பிராந்திய ரயில்வே

# இன்ஜினீயரிங் தொழிலாளர் மகாநாடு

## இழந்த உரிமைகளை மீண்டும் பெற

## காங்கி நீளத்தை 3 மைலாக்க போர் முரசு

தென் பிராந்திய ரயில்வே இன்ஜினீயரிங் தொழிலாளர் மகாநாடு தியாகபூமி சேலத்திலே 5–7–53ந் தேதியன்று நடைபெற்றது. தென் பிராந்திய ரயில்வே பூராவிலுமிருந்தும் சுமார் 1,200 பிரதிநிதிகள் இம்மகாநாட்டில் கலந்து கொண்டனர். ரயில்வே தொழிற் சங்க வரலாற்றிலேயே இது மிகவும் முக்யத்வம் வாய்ந்ததொரு சம்பவமாகும்.

### மகாநாட்டுச் சூழ்நிலை

இந்த மகாநாடு எந்த சூழ்நிலையில் நடைபெற்றது? ரயில்வேயில் இன்ஜினீயரிங் டிபார்ட்மென்டில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு வாங்கும் சம்பளம் வாழ்க்கை நடத்தப் போதவில்லை, லஞ்சமும் ஊழலும் நிறைந்த நிர்வாகத்தின் தொந்திரவு. காங்கி நீளத்தை ஒரு தொழிலாளி கவனிக்கவேண்டிய 3 மைலிலிருந்து 4 மைலாக உயர்த்தி வேலைப் பளுவையும், ஆட்குறைப்பையும் காங்கித் தொழிலாளர் மீது திணித்திருக்கிறது ரயில்வே நிர்வாகம். டெம்பாரி-கேஷுவல் லேபர் முறையைப் புகுத்தி சம்பள வெட்டை ஏற்படுத்தியுள்ளார்கள். இதன் மூலம் சம்பளக் கமிஷன் சிபார்சுகள் குப்பைத் தொட்டிக்குப் போய்விட்டன. இத்தகைய நெருக்கடிகளின் கீழ் வேலை செய்யும் இன்ஜினீயரிங் டிபார்ட்மென்ட் தொழிலாளரிடையே வளர்ந்தோங்கி வரும் போராட்ட உணர்ச்சியே இவ்வளவு பிரதிநிதிகளை இம்மகாநாட்டிற்கு வரும்படிச் செய்தது. காங்கித் தொழிலாளர்களின் பெண்களும் குழந்தைகளும்கூட மகாநாட்டிற்கு வந்திருந்தனர்.

### மகத்தான ஊர்வலம்

சேலம் ஜங்ஷனை அடுத்துள்ள சூரமங்கலத்தில் தியாகி பரமசிவம் பந்தலில் மகாநாடு ஆரம்பமாயிற்று. மகாநாடு ஆரம்பிப்பதற்கு முன், சேலம் ஜங்ஷன் இதுவரை கண்டிராத முறையில் ரயில்வேத் தொழிலாளர்களின் மகத்தானதொரு ஊர்வலம் நடைபெற்றது. சுமார் 3,000 பேர்கள், லேபர் யூனியனை அங்கீகாரம் செய், காங்கி நீளத்தை 3 மைலாக்குக என்ற கோஷங்கள் முழங்க ஊர்வலத்தினர் மகாநாட்டுப் பந்தலுக்கு வந்து சேர்ந்தனர்.

மண்டபம் காங்கித் தொழிலாளத் தோழர் சந்திரன் செங்கொடி பேற்றுவித்தார். அவர் பேசுகையில், "துருப்பிடித்து ஓட்டை உடசலுடன் கூடிய சட்டிகளை வைத்துக்கொண்டு கேஜ் போட்டுப்பார்த்தால் நிலைமை எப்படியிருக்கும்? கீ கட்டைகளை ஈரத்துடன் ரயில்வே நிர்வாகம் வாங்கிப்போட்டிருக்கிறது. காய்ந்த பிறகு அது சுருங்கிப்போகும் காரணத்தால் நாங்கள் அருகிலுள்ள மரங்களிலிருந்து குச்சிகளையும் கட்டைகளையும் கீ கட்டையுடன் சொருகி லைனைப் பாதுகாத்துவருகிறோம். ஆகவே இந்த மோசமான நிலைமைகளை நாம் எதிர்த்துப் போராடியாகவேண்டும். ஒன்றுபட்டு நம் சங்கத்தை பலப்படுத்தவேண்டும்" என்றார்.

### சங்க அங்கீகாரத்திற்குப் போராடுவோம்

மத்திய சங்கப் பொதுக் காரியதரிசி தோழர் அனந்த நம்பியார், எம். பி., மகாநாட்டைத் திறந்து வைத்துப் பேசுகையில், "கடந்த காலத்தில் நாம் பல போராட்டங்களையும், கிளர்ச்சிகளையும் நடத்தி பல கோரிக்கைகளையும் பெற்றுள்ளோம். 8 மணி நேர வேலை, வாராந்திர ஓய்வு, லீவ் வசதி, இரவு படுக்கை முறையை எதிர்த்தும், பழிவாங்குதலை எதிர்த்தும் போராட்டம் நடத்தி கோரிக்கைகளைப் பெற்றோம். 12 ரூபாய் அடிமைச் சம்பளத்தை போக்குவதற்காகப் போராடினேம். இன்று நம்முடைய பலஉரிமைகள் பிடுங்கப்பட்டுள்ளன. கம்யூனல் விடுமுறை ரத்து செய்யப்பட்டுள்ளது. தீபாவளி, ஓணம் நாட்களிலும் வேலை செய்ய வேண்டியுள்ளது. மக்களின் ஓட்டுகளைப் பெற்றுக்கொண்டு பதவியில் போய் அமர்ந்துள்ள காங்கிரஸ் சர்க்கார் சென்னை முதலாளிகளுக்கும், பணக்காரக் கூட்டத்திற்கும் சேவை செய்கிறது. இந்த சூழ்நிலைமையில் 3 ரயில்வேக்களின் இணைப்பு ஏற்பட்டு, 2500 மைல் நீளம் கொண்டிருந்த ரயில்வே 6000 மைலாக விரிவடைந்துள்ளது. நம்முடைய சங்கம்தான் மிகப்பெரிய சங்கமாக இருந்தபோதிலும், இன்னும் நம் சங்கத்திற்கு பிடுங்கப்பட்ட அங்கீகாரத்தை திரும்ப வழங்க ரயில்வே போர்டு காலம் கடத்தி வருகிறது. பேப்பர் சங்கங்களுக்கு அங்கீகாரமளிக்கப்படுகிறது. நிர்வாகத்தின் நல்லபிள்ளையாக நடக்கும் அங்கீகாரம் நமக்குத் தேவையில்லை. தொழிலாளிகளை ஒன்று திரட்டி பலம் வாய்ந்துள்ள நமது சங்கத்திற்கு பொது மக்கள், தொழிலாளிகளின் அங்கீகாரம் இருக்கிறது.

உடலைப் பிழிந்து உழைக்கிறோம், ஆனல், உயிர்வாழப் போதிய ஊதியமுண்டா?

### செருப்பும், சட்டையும் பெறுவோம்

காங்கி நீளத்தை மீண்டும் 3 மைலாக்குவது, டெம்பாரிகளையும் கேஷுவல் லேபரையும் பர்மனெண்ட் ஆக்குவது, அடிப்படைச் சம்பளத்தை 35 ரூபாய் ஆக்குவது ஆகியவை நம்முடைய முக்கிய கோரிக்கைகள். கடும் வெய்யலில் நெற்றி வியர்வை சொட்டச்சொட்ட வேலை செய்யும் காங்கித் தொழிலாளிகளுக்கு செருப்பும் சட்டையும் வாங்கியே தீருவோம்; ரெயில்வேத் தொழிலாளிகளின் பிள்ளைகளுக்கு ரயில்வேயில் கட்டாயம் வேலை கொடுக்க வேண்டுமென்ற கோரிக்கையிலும் வெற்றி பெறுவோம். வீட்டு வசதி, இலவசக் கல்வி வசதி ஆகியவைகளுக்காகவும் போராடுவோம்" என்றார்.

வரவேற்புக் கமிட்டித் தலைவர் தோழர் வெங்கடாசலம் பிரதிநிதிகளையும், பார்வையாளர்களையும் வரவேற்றுப் பேசினர்.

### சங்கத்திற்கு ரூ. 10,000 நிதி

மத்திய சங்க உப – தலைவர் தோழர் பி. எம். சுப்ரமண்யம் மகாநாட்டுக்குத் தலைமை தாங்கினர். அவர் தன்னுடைய பிரசங்கத்தில், "முன்னாள் எஸ். ஐ. ஆர். பகுதியில்மட்டும் நாம் பலமாக இருந்தால் போதாது. 6000 மைல் நீளத்திலும் நம் இயக்கம் விரிவடையவேண்டும். பொது மக்களின் ஆதரவையும் திரட்டவேண்டும். சங்கத்தின் வேலைகளைத் திறம்பட நடத்த ரூபாய் 10,000 சங்கத்திற்கு நிதி திரட்டவேண்டும் என்று மத்திய சங்கம் வேண்டுகோள் விடுத்துள்ளது. அதற்கு அனைவரும் உதவி செய்யவேண்டும். சங்கத்தைப் பலப்படுத்த வேண்டும்" என்றார்.

பல ஸ்தாபனங்களின் சார்பில் மகாநாட்டுக்கு வாழ்த்துரைகள் தெரிவிக்கப்பட்டிருந்தன. மத்திய சங்கத்தின் தலைவர் தோழர் எம். கல்யாணசுந்தரம் பேசுகையில், "காங்கித் தொழிலாளிகள் கிராமங்களிலுள்ள விவசாய மக்களைச் சேர்த்து விவசாய சங்கங்களைக் கட்டுங்கள்; சந்தானத்தைப் பதவியிலிருந்து வெளியேற்றிய மாதிரி, ரெயில்வே தொழிலாளர்களின் நல்வாழ்வுக்காகப் பாடுபடாத ரெயில்வே மந்திரி அளகேசனையும் வெளியேற்றும் பலம் உங்கள் கையில் இருக்கிறது. ரெயில்வேயில் 4-ம் வகுப்புத் தொழிலாளிகள்தான் நம் சங்கத்தின் முதுகெலும்பு. நாலரை லட்சம் 4-வது வகுப்புத் தொழிலாளிகளும், 2 லட்சம் ஒர்க் ஷாப் தொழிலாளிகளும் சேர்ந்தால் நாம்தான் அதிகமானவர்கள். நாம் ஒன்றுபட்டால் எந்தக் கோரிக்கைகளையும் போராடிப் பெற முடியும் என்றார். யுத்த காலத்தில் எடுபட்ட கிருஷ்ணகிரி - ஹோசூர் ரெயில் பாதையை மீண்

(9-ம் பக்கம் பார்க்க)

---

# ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனி தொழிலாளர் மாபெரும் வெற்றி

சென்னை நகரிலுள்ள ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனி தொழிலாளர்கள் தம் சங்கத்தை வலுப்படுத்தி, தொடர்ச்சியாக கிளர்ச்சி செய்து வந்ததால், கீழ்க்கண்ட வெற்றிகளைப் பெற்றார்கள்:

★ 8 நாள் பண்டிகை லீவ் 14 நாட்களாக்கப் பட்டது.

★ சிக் லீவ் இதுவரை இல்லை. இனி 10 நாள் சிக் லீவ் கிடைக்கும்.

★ ஒண்ணே முக்கால் ரூபாய் பேட்டா 2 ரூபாயாக்கப்பட்டது.

★ வெளியூர்களில் வேலை செய்யும் தோழர்களின் சம்பளம் 7-ம் தேதிக்குள் பட்டுவாடா செய்வதாக ஒப்புக்கொள்ளப்பட்டது.

★ நகரின் எல்லையைத் தாண்டி வேலை செய்யச் சென்றால் 10 அணு உணவுப்படி தரப்படும்.

★ ஒரு அணு வண்டிச் சத்தத்துக்கு மேற்பட்ட இடத்துக்கு வேலைக்கு சென்றால், தினமும் போக வர வண்டிச் சத்தம் கம்பெனியால் தரவேண்டும்.

★ கிரேடிங் சிஸ்டம் ஒத்துக் கொள்ளப்பட்டது.

★ கிராஜுடி: வேலையை விட்டு கம்பெனியால் நீக்கப்பட்டால் கிராஜுடியாக வருடத்துக்கு 15 நாள் அடிப்படை சம்பளம் தருவதாக ஒப்புக்கொள்ளப் பட்டது.

✱ லக்ஷிமிநாராயணன், அந்தோணி தாஸ் ஆகியவர்களுக்கு கொடுக்கப்படாமலிருந்த சென்ற வருடத்திய போனஸ் கொடுக்கப் படும்.

✱ இந்த வருட போனஸாக 2 மாத அடிப்படைச் சம்பளமும், ஒரு மாத பஞ்சப்படியும் தருவதாகவும் நிர்வாகம் ஏற்றுக்கொண்டது.

✱ மஸ்தூர்களின் 12 அணு கூலியை வருடத்துக்கு 1 அணு உயர்வு வீதம் 1¼ ரூபாய் வரை கொடுக்கப்படும். பாக்கர்களுக்கும் ஸ்டோர் கார்பெண்டர்களுக்கும் 1¼ ரூ. சம்பளத்தை வருடத்துக்கு 2 அணு உயர்வு வீதம் 3 ரூபாய் வரையும் உயர்த்தப்படும்.

மேற்கண்ட வெற்றிகளைப் பெற்ற தொழிலாளர்கள், சங்கத்தை மேலும் பலப்படுத்தி, ஆண்டு விழா தயாரிப்பில் இறங்கியிருக்கிறார்கள்.

# பாசிஸ்ட் மிலேச்சர்களுக்கு மன்னிப்பு-
# எங்களுக்கு மரணதண்டனையா?

## ஈதல் ரோசன்பர்க்கின் கடைசி கடிதம்

*ரோசன்பர்க் தம்பதிகள் கொலை செய்யப்படுவதற்கு முன்னர், அமெரிக்க ஜனாதிபதி ஐசனோவருக்கு ஈதல் ரோசன்பர்க் எழுதிக்கொண்ட உள்ளமுருக்கும் கடிதத்தின் சாராம்சம் கொடுக்கப்பட்டுள்ளது.*

அன்புள்ள ஜனாதிபதி!

சிங்சிங் சிறைக்கூடத்தின் மரணக் கொட்டடியில் கடந்த இரண்டு வருடங்களாக அடைபட்டுக்கிடக்கும் நான் தங்களுக்குக் கடிதம் எழுதவேண்டுமென பன்முறை சிந்தித்ததுண்டு. ஆனால், ஒவ்வொரு முறையும் என்னை அறியாத வெட்கம் – பெரிய புகழ் பெற்ற மனிதர்கள்முன் நிற்கும்பொழுது சாதாரண மனிதர்களுக்கு ஏற்படும் உணர்ச்சி என்னைக் கவ்விக் கொள்வதுண்டு. எழுத நினைத்த கடிதம் இறுதியில் தடைபட்டுப்போகும்.

தன் கணவரை விடுதலை செய்ய வேண்டுமென்று திருமதி வில்லியம் ஓடிஸ் செக்கோஸ்லோவேகிய ஜனாதிபதிக்குக் கடிதம் எழுதியதைக் கண்ணுற்றேன். இது எனக்கு ஊக்கத்தை யளித்தது. என்னை உற்சாகமூட்டியது. ஒரு அன்னியநாட்டின் அரசாங்க அதிபரிடம் தன் உள்ளத்தைத் திறந்துகாட்ட திருமதி ஓடிஸ் வெட்கப்படவில்லை. திருமதி ஓடிஸின் கணவர் விடுதலைசெய்யப்பட்டார். திருமதி ஓடிஸிற்கு அன்னியர்கள் காட்டிய இதே அளவு கருணையை, மன்னிக்கும் மனப்பான்மையை என்மீதும் தாங்கள் காட்டவேண்டுமென்று வேண்டிக்கொள்வதற்கு நான் ஏன் தயங்கவேண்டும்?

செக்கோஸ்லோவேகியாவைப் பற்றிநான் அறிந்தது மிகவும்சொற்பம். அந் நாட்டின் ஜனாதிபதியைப் பற்றி எனக்குத் தெரிந்தது அதைவிடக் குறைவு. ஆனால், இது என்னுடைய தேசம். நீங்கள் எங்களுடைய ஜனாதிபதி. ஜனாதிபதி ஆவதற்கு முன்பேகூட, நீங்கள் கடந்த யுத்தத்தில் கோடிக்கணக்கான மக்களின் 'விடுதலை கர்த்தாவாக' த் திகழ்ந்தீர்கள். எனவே, மரணதண்டனை விதிக்கப்பட்டுள்ள ஒரு கணவனும், மனைவியும் சமர்ப்பிக்கும் கருணை மனுவைத் தாங்கள் நிதானமாகவும், அனுகூலமாகவும் பரிசீலிப்பீர்கள் என்று எதிர்பார்ப்பதில் என்ன தவறு?

### பாசிஸ்ட்களுக்கு மன்னிப்பு! எங்களுக்கு மரணதண்டனையா?

எங்கள் உயிர்களைக் காப்பாற்ற இதுவரையிலும் தாங்கள் எத்தகைய முயற்சியும் செய்யவில்லை. ஒரு வேளை அரசாங்க வேலைப் பளுவின் நிர்ப்பந்தத்தினால், எங்கள் வேண்டுகோளைப் பரிசீலிப்பதற்குத் தங்களுக்கு அவகாசம் கிடைக்காமலிருந்திருக்கலாம்.

எங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கும் மரண தண்டனையை சற்று கவனியுங்கள். கடந்த இரண்டு வருடங்களாக, நித்தம் நித்தம் மரணத்தை எதிர்நோக்கித் தனிக் கொட்டடியில், எங்கள் அருமைக் குழந்தைகளிடமிருந்து பிரிந்து கிடக்கிறோம். எல்லையற்ற துன்பத்தை இது இன்னும் அதிகரிக்கிறது. தண்டனையின் பெயரால், நாங்கள் பழிவாங்கப் படுகிறோம்.

ஐரோப்பிய போர் அரங்கில் தாங்கள் சேனாதிபதியாக இருந்த பொழுது, இத்தகைய பழிவாங்கும் கொள்கைக்குப் பலியான கோடிக்கணக்கான மக்களின் துன்பதுயரங்களைக்காணும் வாய்ப்புக் கிடைத்திருக்கும். இத்தகைய படுபாதகங்களை இழைத்தகொலைகாரர்களுக்கு, அருவருக்கத்தகுந்த பாசிஸ்டுகளுக்கு இன்று கருணை காட்டப்படுகிறது. மேலும் பல கொலைபாதகர்கள் பொறுப்பான பதவிகளில் மீண்டும் அமர்த்தப்படுகின்றனர். இத்தகைய பாசிஸ்டுகளுக்கு மன்னிப்பு அளிக்கப்படும்பொழுது, குற்றம் செய்யாத ஒரு சின்னஞ்சிறு யூத குடும்பத்தை மிருகத்தனமாக நசுக்கித் துவைக்க பெரும் ஜனநாயக நாடான அமெரிக்கா முயற்சிக்கிறது.



எங்கள் தண்டனையை நிறைவேற்றினால், அமெரிக்க அரசாங்கத்தின்மீது மாறாத பழி ஏற்படும். எங்கள்மீது சுமத்தப்பட்டுள்ள குற்றச்சாட்டுகள்மீது உலக மக்களில் பெரும்பாலோர் சந்தேகம் தெரிவித்துள்ளனர்.

தன் தாய் தந்தையரைக் காப்பாற்றும்படி எங்கள் சின்னஞ்சிறு குழந்தையும் கருணை மனு சமர்ப்பித்துள்ளது. வில்லியம் ஓடிஸ் செக்கோஸ்லவாக்கிய ஜனாதிபதியால் மன்னிக்கப்பட்டதைக்கண்டு அவன் மனம் உவகை பூக்கிறது. இம்மாதிரியே, தன் பெற்றோர்களும், ஜனாதிபதி ஐசனோவரால் விடுதலை செய்யப்படுவார்கள் என்று அந்தக் குழந்தையுள்ளம் ஆசையுடன் எதிர்பார்க்கிறது.

### உங்கள் மனைவியின் கருத்தைக் கேளுங்கள்

எனவே, தங்களிடம் கருணையை வேண்டி நான் இக்கடிதத்தை சமர்ப்பிக்கிறேன். நீதிபதிகளின் தீர்ப்பைப்பற்றி யோசிக்காதீர்கள். பரந்த மனிதாபிமானத்துடன் இந்த மனுவை பரிசீலனை செய்யுங்கள். சரித்திரம் போற்றும்மாபெரும்மனிதர்களின் புகழ் அனைத்தும் அவர்களின் நற்குணங்களால்தான் அளவிடப்படுகின்றன என்பது தாங்கள் அறியாததல்ல. ஏசுகிறிஸ்து, மோசஸ், மகாத்மா காந்தி முதலியோர்களின் தியாகவாழ்க்கைகளை கவனியுங்கள். இவர்களின் ஆத்ம பொக்கிஷங்கள் நெப்போலியனின் திக்கு விஜயங்களைவிட பிரமிக்கத்தக்கவை.

எங்கள் கருணை மனுவின்மீது முடிவு செய்வதற்கு முன்னர், தங்கள் மனைவியையும் கலந்து ஆலோசியுங்கள். உங்கள் ஒரே மகனின் தாயாரின் உள்ளக் கருத்தையும் கேளுங்கள். என்னுடைய துன்ப துயரத்தை அவளுடைய தாய் உள்ளம் புரிந்துகொள்ளும். அவளுடைய மகனைப் போலவே, என்னுடைய மகனும் வளர்ந்து, வலுப்பெற்று மனிதப் பிராயத்தை அடைவதைப் பார்க்கவேண்டும் என்ற என் இதயத்துடிப்பை தங்கள் மனைவியால் புரிந்துகொள்ள முடியும். அவளுடைய அருமைக் கணவரான தாங்கள் அருகில் இருப்பதைப்போலவே என்னுடைய அன்புக் கணவரும் என்னுடன் உயிர் வாழவேண்டுமென்று நான் ஆசிப்பதை அவளால் புரிந்துகொள்ளமுடியும். எங்களுக்குக் கருணை காட்ட வேண்டுமென்று அவளுடைய தாய் உள்ளம், தங்களுடன் எனக்காக வாதாடும்.

(உள்ளமுருக்கும் இக்கடிதத்தைக் கண்டும்கூட ஐசனோவரின் அரக்க உள்ளம் இளகவில்லை. ரோசன்பர்க் தம்பதிகள்மீது கருணை காட்ட முன்வரவில்லை. எனவே, ஜூன் 19ம் தேதியன்று நிரபராதிகளான அமெரிக்க சமாதான வீரர்கள் சிங்சிங் சிறைக்கூடத்தில் கொலை செய்யப்பட்டார்கள்.)

## ஆட்குறைப்பை எதிர்த்து அடையாள வேலை நிறுத்தம்

அகில இந்திய பாதுகாப்பு இலாக்கா தொழிலாளர் சம்மேளனத்தின் முடிவுப்படி ஜூன் 30ம் தேதி, அருவன்காடு (நீலகிரி) கார்டைட் பாக்டரியில் ஒருநாள் அடையாள வேலைநிறுத்தம் நடைபெற்றது. 98 சதவிகிதம் தொழிலாளிகள் வேலை நிறுத்தத்தில் பங்கெடுத்துக் கொண்டனர். அமைதியாகவும், சாந்தமாகவும் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்ததை போலீஸ் அதிகாரிகள் உள்பட சகலரும் வியந்தனர்.

மாலை 3-30 மணிக்கு, குன்னூர் ஜவஹர்பேட்டையில், சங்கத் தலைவர் K. T. K. நம்பியார் தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அதுசமயம் பெள்ளி கவுடர், முத்துக்குமாரன், காரியதரிசி சிங்காரம் ஆகியோர் பேசினார்கள். ஆட் குறைப்பை எதிர்த்தும், தற்போதுள்ள தொழிற்சாலைகளில் உபயோகப் பொருள் உற்பத்தி செய்யக்கோரியும், ஆட்குறைப்பு இருக்குமானால் சம்மேளனம் மேற்கொண்டு தக்க நடவடிக்கை எடுக்கக் கோரியும், ஜபல்பூர் தொழிலாளர்மீது அடக்கு முறை ஏவி விடப்பட்டதை கண்டித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## சர்க்கரை மோசடி

எங்கு பார்த்தாலும் சர்க்கரை விலை உயர்ந்துகொண்டே வருகிறது. சாதாரண மக்கள் வாங்கி உபயோகிக்க முடியாத நிலமை. இதற்கு காரணம் யார்? நம் நாட்டில் போதிய கரும்பு விளையவில்லையா? இவ்வருஷ விளைச்சல் 15 லட்சம் டன். இது எங்கே? இதற்கு முன் இந்த சர்க்கரையின் விலைக் கட்டுப்பாடும் வினியோகமும் இந்திய சர்க்கார் கையிலிருந்தது. சர்க்கரை முதலாளிகளின் நிர்ப்பந்தத்திற்குள்ளாகி இந்திய சர்க்கார் சர்க்கரை மேலிருந்த கட்டுப்பாட்டை நீக்கியது. அதன் பிறகு சர்க்கரைவிலை விஷம்போல் உயர ஆரம்பித்தது. உலக மார்க்கெட்டில் ஒரு மணங்கு சர்க்கரை விலை ரூ. 14 தான். ஆனால் இந்தியாவில் கட்டுப்பாடு நீக்கத்திற்கு பிறகு ரூ. 30-8-0 ஆக உயர்ந்துள்ளது,

இதுமட்டுமல்ல. இவ்வருஷ சர்க்கரை உற்பத்தி 15 லட்சம் டன். உற்பத்தி அதிகரித்துவிட்டதால் விலை குறைந்து பெரும் நஷ்டமேற்படுமென்று சர்க்கரை முதலாளி இந்திய சர்க்காரிடஞ் சென்று கூக்குரலிட்டனர், முதலாளிகளின் குரலை அனுதாபத்துடன் சர்க்கார் கேட்டது. ரூ. $4\frac{1}{2}$ கோடி அவர்களுக்கு மான்யமாகக் கொடுத்தது. சர்க்கார் கையிலிருந்த சர்க்கரையின் விலையை மணங்கிற்கு ரூ. 1 ஆக உயர்த்தி மக்களிடமிருந்து வசூலித்து முதலாளிக்கு காணிக்கை செலுத்தியது.

லாபவெறி கொண்ட முதலாளிகளுக்கு இதுவும் போதவில்லை விவசாயிகள் உற்பத்தி செய்து விற்பனை செய்யும் கரும்பின் விலை குறைக்க வேண்டுமென்று கூக்குரலிட்டனர். இதற்கும் நேரு சர்க்கார் செவி சாய்த்ததுடன் ரூ. 47–12–0வாக இருந்த கரும்பு விலையை ரூ. 35–11–0 ஆக குறைதத்து.

சர்க்கரை முதலாளிகளுக்கு இந்திய சர்க்கார் இவ்வளவு பணிந்து சென்று, மக்கள் நலனைக் காட்டிக் கொடுத்த போதிலும், சர்க்கரை வேதாளங்கள் முருங்கை மரத்திலிருந்து இறங்க மறுக்கின்றன. கையிருப்பு சர்க்கரையைமறைத்து வைத்து, ஆலைகளைமூடி, தொழிலாளிகளை தெருவில் விரட்டி விட்டு, சர்க்கரை உற்பத்தியைக் குறைத்து, செயற்கையான பற்றாக் குறை நிலையை உண்டாக்கி அதிக விலைக்கு சர்க்கரையை விற்க சதி செய்கின்றனர்..

### கோணல் யோசனை

இந்தச் சதியை முறியடிக்க நேரடி நடவடிக்கை எடுக்க தைரியமில்லாத இந்திய சர்க்கார் இன்று கியூபா என்ற தேசத்திலிருந்து இந்தியாவிற்குச் சர்க்கரை இறக்குமதி செய்யப்போவதாக அறிவித்துள்ளது. இந்தத் தேசிய விரோதச் செய்கை, இந்திய மக்களையும் இந்தியக் கரும்பு உற்பத்தியாளர்களையும் பெரும்பங்கு பாதிக்குமென்று அகில இந்திய கிஸான் சபா அறிக்கை விடுத்து கண்டனஞ் செய்துள்ளது. இந்திய நாட்டில் உற்பத்தியாகித் தேங்கிக் கிடக்கும் சர்க்கரையை, கொள்ளை லாப சர்க்கரை முதலாளிகளின் சதிக்குள் சிக்கி இருக்கும் சர்க்கரையை எடுத்துக் கட்டுப்பாடான விலையில் வினியோகிக்காமல், அன்னிய நாட்டிலிருந்து இறக்குமதி செய்வது தேசிய விரோதச் செய்கையல்லாமல் வேறு என்ன?

## 'தாராள' இறக்குமதிக் கொள்கை

ஏகாதிபத்திய நாடுகள் தங்கள் சரக்குகளை நம் உள்நாட்டு மார்க்கெட்டில் திணித்துக்கொண்டிருக்கின்றன. இந்தப் போட்டியின் விளைவாக, ஏற்கனவே நம் தொழில்கள் பல நசித்துவருகின்றன. பல மூடப்பட்டுவருகின்றன. இந்த நிலைமையில், நம் நாட்டுத் தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்குப் பதிலாக, இறக்குமதிக் கொள்கையை மேலும் தளர்த்தப்போவதாக இந்திய சர்க்கார் ஜூன் 24-ம் தேதியன்று அறிவித்தனர்.

யந்திரங்கள் இறக்குமதி செய்யப்படுவதும் தாராளமாக அனுமதிக்கப்படும் என்று அறிக்கை கூறுகிறது. ஆனால் யந்திரங்கள் எனும் லிஸ்டில் டைப்ரைட்டர்கள், குளிர்பதன யந்திரங்கள் (ரெப்ரிஜிரேட்டர்) முதலியவைகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. எனவே, நம் நாட்டிற்குள் எத்தகைய 'யந்திரங்கள்' இறக்குமதி செய்யப்படும் என்பது இதிலிருந்து தெளிவாகிறது. நம் தேசத்தை யந்திரமயமாக்குவதற்குத் தேவையான யந்திரங்களை இறக்குமதிசெய்ய ஏகாதிபத்தியவாதிகள் ஒருக்காலும் முன்வரமாட்டார்கள் என்பது யாவரும் அறிந்ததே.

இதுதவிர, பவுண்டன்பேனா, மை, பால்புட்டி, பழவகைகள் முதலியவைகளின் இறக்குமதியும் தாராளமாக்கப் பட்டிருக்கிறது. நம் தேசத்தில் பஞ்சாலைத் தொழில் நெருக்கடியில் சிக்கித் தத்தளிக்கும்போது, வெளிநாடுகளிலிருந்து80ம் நெம்பர் நூலையும் அதிகமாக இறக்குமதிசெய்ய சர்க்கார் அனுமதித்துள்ளது.

ஏகாதிபத்திய நாடுகள் தங்கள் சரக்குகளை நம் நாட்டில் திணிப்பதற்குச் சாதகமாக இந்திய சர்க்காரின் இறக்குமதிக் கொள்கை இருக்கிறது என்பது இதிலிருந்து மிகத் தெளிவாகப் புலனாகிறது.

## புதிய சோவியத் ஸ்தானிகருக்கு வரவேற்பு

புதிய சோவியத் ஸ்தானீகரான ஐவான் அலெக்ஸாண்ட்ரோவிச் பெனடிக்டோவ் புதுடில்லிக்கு ஜூன் 24-ம் தேதியன்று வந்து சேர்ந்தார். சீன ஸ்தானீகரும், இதரநாட்டு ராஜதந்திரிகளும், இந்திய சர்க்கார் அதிகாரிகளும் அவரை விமான நிலயத்தில் வரவேற்றனர்.

### இந்தியாபால் ஆழ்ந்த நேசம்

இந்திய மக்கள் பால் சோவியத் மக்கள் மிகவும் ஆழ்ந்த நேசப்பான்மை கொண்டிருப்பதாக பெனடிக்டோவ் பத்திரிகை நிருபர்களிடம் அறிவித்தார்.

இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்குமிடையேயுள்ள நட்புறவுகளை அவர் வலியுறுத்திக் கூறினார். உலக சமாதானத்தை உறுதியாக நிலை நிறுத்துவதில் நம்மிரு நாடுகளுக்கும், நம்மிருமக்களுக்குமிடையேயுள்ள நல்லுறவுகள் மிகக் கேந்திரமான பாத்திரத்தை வகிக்கின்றன என்றும் அறிவித்தார்.

"நம் இரு நாடுகளுக்கிடையேயுள்ள நேச உறவுகளை மேலும் பலப்படுத்தி அவைகளை விரிவுபடுத்துவது என்னுடைய முக்கியமான கடமைகளில் ஒன்றாகும்" என்று சோவியத் ஸ்தானிகர் மேலும் கூறினார்.



புதிய சோவியத் ஸ்தானிகரான பெனடிக்டோவ் விவசாயத் துறையில்சிறந்தவிஞ்ஞானியாவார். இவர் 1902ல் நவிசுகா எனும் கிராமத்தில் பிறந்தார். இவருடைய தந்தை சாதாரண தபால்காரன். விசுக் எனும் நகரில் தன் 15-ம் வயதில் இவர் பஞ்சாலையில் தொழிலாளியாகச் சேர்ந்தார்.

1923-ல் இவர் மாஸ்கோவில் தொழிலாளர் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றார். பின்னர் விவசாயப் பொருளாதாரத்தில் பட்டம் பெற்று, உஜ்பெக் குடியரசில் விவசாய மந்திரி இலாக்காவில் விவசாயப் பொருளாதார நிபுணராகப் பணியாற்றினார்.

1947-ல் சோவியத் யூனியன் விவசாய மந்திரியாகப் பெனடிக்டோவ் பணியாற்றினார்.

### வாழ்க்கைதரம் உயர ஒப்பற்ற சேவை

சோவியத் விவசாயிகளின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கு இவர் ஆற்றிய ஒப்பற்ற சேவையாலும், சாதித்த மகத்தான சாதனைகளாலும் இவருக்குச் சோவியத் சர்க்கார் மூன்று தடவைகள் "ஆர்டர் ஆப் லெனின்" எனும் மிக உயர்ந்த பதக்கத்தை அளித்து கௌரவித்துள்ளது.

அறிமுகம்

# தலைவெட்டி வெறியன் டெம்ப்ளர்

மலேயா மக்கள் நடத்துகிற வீரதீர விடுதலைப் போராட்டத்தின் 5-வது ஆண்டு விழா சென்ற ஜூன் 15ம் நாள் நடைபெற்றது. ஐந்தாண்டைய நீண்ட நெடும் காலம்; மலேயா தேசபக்தர்கள் கையில் ஆயுதமேந்தி தமது நாட்டு விடுதலை அறப்போரை சிதைத்து சின்னாபின்னப் படுத்த மூர்க்காவேசத்தோடு உறுமி எழுந்த பிரிட்டிஷ் காலனி ஆதிக்கக் கொலை பாதகர்களின் 'படித்த வித்தை பதினெட்டையும்' அநீத கொடூர உள் நோக்கத்தையும் எதிர்த்து நின்றனர்.

குண்டுகளை மழையாகப் பொழிந்து பார்த்தார்கள், நப்பாம்குண்டுகளை சரமாரியாக வீசிப்பார்த்தார்கள், ரசாயன அக்னி வஸ்துக்களை இரக்கமின்றி எறிந்து பார்த்தார்கள், நரவேட்டைக் காட்டாளர்களான 'தலைவெட்டிக் கிராதகர்களை'க் கொண்டு ஆயிரமாயிரம் தலைகளைக் கொய்து குவித்துப் பார்த்தார்கள், கிராமம் கிராமமாக லங்காதகனம் நடத்தி சர்வநாசம் செய்து பார்த்தார்கள், நிரபராதிகளான பதினாயிரக் கணக்கான, மலேயா மக்களை காவல்பாளயத்தில் சிறைப்பிடித்து வதைத்துப் பார்த்தார்கள், ரேஷன் கார்டுகள் கொடாமல் நிறுத்தி, மக்களை பட்டினிப் பேய்க்கு இரையாக்கிப் பார்த்தார்கள் — இவ்வாறெல்லாம் அடக்கல் - ஒடுக்கல் முறையை மூர்த்தண்யமாக முடுக்கிவிட்டு தலைகீழ் நின்று பார்த்தும், பிரிட்டிஷ் காலனி வெறியர்களால் மலேயா மக்களின் அறப்போரை நசுக்கக் கையாலாகவில்லை.

மூன்றுலக்ஷம் படைவீரர்களை இன்னும் பிரிட்டன் மலேயாவில் வைத்திருக்கிறது, மலேயா மக்களை அடிமை மந்தையாக்க முடியுமென்ற தீக்கருத்தோடு. இந்த சோற்றுப் பட்டாளத்தின் 'ஒப்பற்ற' தலைவன்தான் ஜெனரல் டெம்ப்ளர்! மலேயாக் கொரில்லாக்களின் துப்பாக்கிக்கு இரையாகிய, தனக்கு முன்பிருந்தவர் ஸ்தானத்தை பூர்த்திசெய்து கொண்டு இரண்டு ஆண்டுகளுக்கு முன், டெம்ப்ளர் மலேயாவின் மண்ணில் வந்திறங்கியதும் இரண்டே இரண்டு மாதங்களில் தான் கம்யூனிஸ்ட் பயங்கரவாதிகளை (!) —தாய்நாட்டின் விடுதலைக்காகப் போராடுகிறவர்களுக்கு ஏகாதிபத்தியவாதிகளின் அகராதியில் அதுதான் அர்த்தம் — அள்ளித் துடைத்துவிடுவேன் என்று வீம்பும் வீறாப்பும் பேசினான். ஆனால், அதே டெம்ப்ளர் சில வாரங்களுக்குமுன் முடிசூட்டிக்கொண்ட பிரிட்டிஷ் ராணியை நேரில் தரிசிக்கச் சென்றபொழுது "பயங்கரவாதிகளை அடக்கி ஒடுக்க என்னால் முடியவில்லை" என்று வெட்ட வெளிப்படையாகக் கூறினான்.

என்னவானாலும், இவற்றினாலெல்லாம் ஏகாதிபத்தியவாதிகளின் 'மான ரோஷம்' போய் விடுவதில்லை. ஜெனரல் டெம்ப்ளருக்கு பிரிட்டிஷ் ராணி அருள் கூர்ந்து "சர்" பட்டம் வழங்கியிருக்கிறார். அது மட்டுமல்ல, ஜெனரல் ரிட்ஜ்வேயின் கீழ், ஐரோப்பிய ராணுவத்திற்குப் போர்க்களத் தலைமை வகிக்கும் மாண்ட்கோமரியின் இடத்திற்கு ஜெனரல் டெம்ப்ளரை நியமிக்கப் போகிறார் என்றும் செய்தி கிடைக்கிறது. மலேயாவில் நடக்காத டெம்ப்ளரின் "ஆண்மை"யும் கைவரிசையும், ஐரோப்பாவில் செலாவணியாகுமா? நிச்சயமாகவும் ஆகாது. பின் எதற்காக இந்த மாதிரி "உயர்ந்த வகுப்புக்கு மாற்றுகிறார்கள்?" புலி புலி யென்று கூறி மலேயா மக்களை பயமுறுத்தும் பொருட்டு, தூக்கி நிறுத்தியிருந்த வைக்கோல் பொம்மை, வெறும் காகிதப் புலியா யிருந்ததென்று மலேயாவின் ரப்பர் தோட்டங்களிலும் தகரச் சுரங்கங்களிலும் முதலீடுசெய்துள்ள வெள்ளை முதலாளிகள்கூட முணுமுணுக்கத் தொடங்கி யிருக்கிறார்கள்.

நரமாம்ச வெறியனான ஜெனரல் டெம்ப்ளர் ஒரு விஷயத்தைப் புரிந்துகொண்டிருப்பான்; தமது எதிர்காலம் தமது கைகளில் தானிருக்கிறதென்ற உணர்வு பெற்றுவிட்ட எந்த மக்களையும் அடக்கி ஒடுக்க ஒரு டெம்ப்ளரல்ல ஓராயிரம் டெம்ப்ளர்கள் விசுவரூபமெடுத்து உறுத்து விழித்தாலும் நடக்காது.

—தேசாபிமானி.

டெம்ப்ளரின் கூலியாட்களின் வேலை.

# சீனா செல்லும் கலைஞர்களுக்கு பாராட்டுக் கூட்டம்

## சென்னை சர்க்கார் போக்கிற்கு சமாதானத் தலைவர்கள் கண்டனம்

மக்கள் சீனாவிற்கு விஜயம்செய்வதற்காக தென்னிந்தியாவிலிருந்து ஜூலை 7ல் புறப்பட்டு செல்லும் மூன்று கலைஞர்களுக்கு பாராட்டுத் தெரிவிப்பதற்காக சென்னை சமாதானக் கமிட்டியின் சார்பில் 5-7-53ல் திரளான பொதுக்கூட்டம் சென்னை, சரஸ்வதி கான நிலையத்தில் நடைபெற்றது. கூட்டத்திற்கு திரு என். எஸ். கிருஷ்ணன் தலைமை வகித்தார்.

தென்னிந்திய ஹாஸ்ய நடிகர்கள் சங்க தலைவர் திரு. டி. வி. சுந்தரம், சரஸ்வதிகான நிலைய காரியதரிசி திரு. கிருஷ்ணசாமி ஐயங்கார், தென்னிந்திய நாதஸ்வர கலைஞர்கள் சங்க காரியதரிசி திருவெண்காடு டி.பி. சுப்ரமணிய பிள்ளை ஆகியோர் சீனா செல்லும் இளம் கலைஞர்களுக்கு பாராட்டுத் தெரிவித்தனர். திரு. கோபால கிருஷ்ணனும், டாக்டர் சந்திரசேகரனும் பாராட்டுதலுக்கு நன்றி தெரிவித்தனர்.

### சீனா செல்லும் இந்திய கலைஞர்கள்

**மகாகவி வள்ளத்தோள்** (கேரள ஆஸ்தான கவிஞர்); **கோபால கிருஷ்ணு** (நாட்டியகலைஞர், தமிழ்நாடு); **தாசப்பா** (தபேலா வித்வான், தமிழ்நாடு); **சந்திரலேகா** (பரதநாட்டிய கலைஞர், தமிழ்நாடு); **சந்திரசேகரன்** (ஆந்திரா); **துரைசாமி அய்யங்கார்** (வீணை வித்வான், கன்னடம்); **பி. தேவேந்திரப்பா** (சங்கீத கலைஞர், கன்னடம்).

மற்றும் பம்பாயிலிருந்து 3 கலைஞர்களும், வங்காளத்திலிருந்து 2 கலைஞர்களும், டில்லியிலிருந்து ஒருவரும், அஸ்ஸாமிலிருந்து ஒருவரும் ஷை கலைஞர் கோஷ்டியுடன் செல்கின்றனர்.

### டைரக்டர் சுப்ரமணியம் பாஸ் போர்ட் பறி

சென்னை சமாதானக் கமிட்டி காரியதரிசி திரு. வி. பரமேஸ்வரன் பேசுகையில் தென்னிந்தியாவிலிருந்து ஒரு கலைஞர் குழுவை மக்கள் சீனாவிற்கு அனுப்புவது என்று அகில இந்திய சமாதானக் கவுன்சில் முடிவு செய்தது. இது சம்பந்தமாக 40 கலைஞர்கள் பாஸ்போர்ட்டுக்கு சர்க்காரிடம் மனுசெய்து கொண்டனர். அவர்களுக்கு பாஸ்போர்ட் வழங்கிய போதிலும் கலைகோஷ்டி தலைவர் டைரக்டர் சுப்ரமணியம் பாஸ்போர்டை பிடுங்கிக் கொண்டதால் அவைகள் மற்றவர்களுக்குக் கிடைத்தும் பயனற்றுப் போய் விட்டன என்று கூறினார். இதனால் இரு கலைஞர்கள்தான் கடைசியாக சீனா செல்ல முடிந்துள்ளது என்றார்.

### அரசியல் நோக்கம் கிடையாது

டைரக்டர் சுப்ரமணியம் பேசுகையில், சீனா செல்லும் கலைஞர்கள் கலை நோக்கமின்றி வேறு நோக்கத்திற்காக அங்கு செல்கிறார்கள் என்று சர்க்கார் கூறும் அவதூறை வன்மையாகக் கண்டித்து சர்க்கார் தன்னுடைய போக்கை மாற்றி சகலருக்கும் பாஸ்போர்ட் கொடுத்து சீனா செல்ல வசதி செய்து கொடுக்க வேண்டுமென்றார்.

திரு. என். எஸ். கிருஷ்ணன் பேசுகையில் சென்னை சர்க்கார் கலைஞர்களை அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்று முத்திரை போடுவதை கிண்டல் செய்தார். சீனா செல்லும் நடிகர்களிடம் ஒரு வெண்கல நடராஜ விக்ரகத்தை கொடுத்து சீன மக்களுக்கு இந்தியக் கலைஞர்களின் சார்பாக அன்பளிப்பாகக் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டார். டைரக்டர் சுப்ரமணியம் வெண்கல மயிலை சீன சமாதானக் கவுன்சிலுக்கு அளிக்கும்படி கொடுத்தார்.

### சீனா செல்ல பரமேஸ்வரனுக்கு பாஸ்போர்ட் மறுப்பு

சென்ற வாரம் சீனாவுக்குப் புறப்பட்டுச் சென்ற இந்திய கலாச்சார தூதுகோஷ்டியின் காரியதரிசி, பரமேஸ்வரனுக்கு, பாஸ்போர்ட் கொடுக்கமாட்டேனென்று மறுத்துவிட்டது ராஜாஜியின் பிற்போக்கு சர்க்கார்.

சென்ற வருடம் பீகிங்கில் நடைபெற்ற ஆசிய சமாதான மகாநாட்டுக்குச் செல்லவும்— வியன்னாவில் நடைபெற்ற உலக சமாதான காங்கிரஸுக்குச் செல்லவும் பரமேஸ்வரனுக்குப் பாஸ்போர்ட் மறுக்கப்பட்டதை நேயர்கள் அறிவார்கள்.

## உலக வாலிபர் விழாவிற்கு செல்லும் இந்திய சைகிள் கோஷ்டியினர்

ஆகஸ்ட் 2 முதல் 16 வரையில் ருமேனியத் தலைநகர் புகாரெஸ்டில் நடைபெற விருக்கும் உலக வாலிபர் விழாவில் கலந்துகொள்வதற்கு இந்தியாவிலிருந்து ஒரு சைகிள் பந்தய கோஷ்டியினர் புறப்படவிருக்கின்றனர். இந்திய தேசீய சைகிளிஸ்ட் சம்மேளனம் இந்த கோஷ்டியைத் தெரிந்தெடுக்கும்.

இங்கிருந்து செல்லும் கோஷ்டியினருடைய செலவினங்கள் பூராவையும் தாங்களே ஏற்றுக்கொள்வதாக விழாக்கமிட்டியினர் புகாரெஸ்டிலிருந்து தெரிவித்துள்ளனர். இதை வரவேற்று, வந்தனம் தெரிவித்து, இந்திய தேசீய சைக்ளிஸ்ட் பெடரேஷன் தலைவர், திரு. பூட் செய்தி அனுப்பியுள்ளார்.

புகாரெஸ்டில் நடைபெறும் உலக வாலிபர் விழாவின்போது நடைபெற விருக்கும் விளையாட்டுப் போட்டிகளில் கலந்துகொள்வதற்கு உலகம் பூராவிலுமிருந்தும் சுமார் 4,000 ஆட்டக்காரர்களும், உடற் பயிற்சியாளர்களும், பெண்களும் வரவிருக்கின்றனர்.

### புதுடில்லியில் இந்திய தயாரிப்புக் கமிட்டி

இந்த உலக வாலிபர் விழாவிற்கு ஒரு தயாரிப்புக் கமிட்டி அமைப்பதற்காக, இந்தியாவிலுள்ள பல வாலிபர், மாணவர் ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளின் கூட்டம் டெல்லியில் ஜூன் 23ந் தேதி நடைபெற்றது.

காங்கிரஸ் பார்லிமெண்டரி கட்சியின் காரியதரிசி ஸ்ரீ வித்தல் பாடி, பிரஜா-சோஷலிஸ்ட் தலைவர் பி. டி. ஜோஷி, ஆகியோரும் வந்திருந்தனர், உலக வாலிபர் விழாவில் கலந்துகொள்ள ஒரு பிரதிநிதி கோஷ்டியை அனுப்பி வைக்க இக்கமிட்டி முயற்சியெடுத்துக்கொண்டிருக்கிறது. புகாரெஸ்டில் விழா தொடங்கும் போதே, டெல்லியில் ஒரு வாலிபர் விழா ஆரம்பிக்கவும் முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

உலக வாலிபர் விழாவின் சர்வதேசத் தயாரிப்புக் கமிட்டியில் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள திரு. கே. அனந்த நம்பியார் (எம். பி.), இந்த விழாவில் கலந்துகொண்டு அதை வெற்றி பெறச் செய்யும்படி இந்திய வாலிபர்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்துள்ளார்.

# த.தொ.ச.கா. கோவை முடிவுகள்

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

### பழிவாங்கப்பட்டோர் பிரச்னை

தென் பிராந்திய ரெயில்வேயில் 300 பேர்களும், மதுரை மில்லில் 500 பேர்களும் அரசியல் காரணங்களுக்காகப் பழிவாங்கப்பட்டு 4 வருடங்களுக்கு மேலாகின்றன. ஆனால் அவர்களை வேலைக்கு எடுத்துக்கொள்ளச் செய்ய இதுவரை எவ்வித முயற்சியும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. இந்தத் தொழிற்சங்க ஊழியர்களை வேலைக்கு எடுத்துக்கொள்ளச் செய்ய இதுவரை எவ்வித முயற்சியும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. இந்தத் தொழிற்சங்க ஊழியர்களை வேலைக்கு எடுத்துக்கொள்ளச்செய்ய சர்க்கார் உடனடியாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கமிட்டி சர்க்காரை வற்புறுத்தியுள்ளது.

தமிழ்நாட்டில் ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட தொழிலாளிகள் தேயிலை, காபி, ரப்பர் தோட்டங்களில் வேலை செய்கின்றனர். 6 மாதங்களுக்கு முன்னால் அவர்களுடைய கோரிக்கைகள் சென்னைச் சர்க்காரால் அட்ஜுடிகேஷனுக்கு விடப்பட்டது. தோட்ட முதலாளிகள் விசாரணை நடைபெறாதிருக்க உயர்நீதி மன்றத்தில் தடையுத்தரவை வாங்கியுள்ளனர். இதன் காரணமாக இப்போது ஸ்தம்பிப்பு ஏற்பட்டுள்ளது. அட்ஜுடிகேஷன் விசாரணையை மீண்டும் தொடங்க வேண்டுமென்றும், அதை 1954 மார்ச்சிற்குள் முடிக்க வேண்டுமென்றும் கமிட்டி சர்க்காரை வற்புறுத்தியுள்ளது.

### நகரசுத்தி தொழிலாளர் பிரச்னை

மதுரை நகரசபையைச் சேர்ந்த 1400 நகரசுத்தித் தொழிலாளிகள் தமிழ்நாடு பூராவிலும் உள்ள நகரசுத்தித் தொழிலாளிகள் பிரச்னையைச் சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவந்துள்ளனர். அவர்களின் தலைவர்களில் இருவர் 21 நாட்களுக்கு உண்ணாவிரதம் இருந்தனர். ஜில்லா அதிகாரிகள் தலையிட்டு குறைகளைத் தீர்ப்பதாகக் கூறினர். அடிப்படைச் சம்பளம் ரூ. 7. பஞ்சப்படி ரூ. 18 என்று சர்க்கார் குறைந்தபட்ச சம்பள சட்டத்தின்படி நிர்ணயித்துள்ளது. இந்தத் தொழிலாளிகள் வாழ்க்கை நிலைமை, வேலை நிலைமைபற்றி முடிவு செய்யச் சர்க்கார் ஒரு விசாரணைக் கோர்ட்டை நியமிக்க வேண்டுமென்று கமிட்டி கேட்டிக்கொண்டுள்ளது.

வெற்றிகாமாக வேலை நிறுத்தப் போராட்டத்தை நடத்திய மீனாம்பிகை பஸ் தொழிலாளிகளை வாழ்த்தியும், அரசாங்க சிப்பந்திகள் இன்சூரன்ஸ் திட்டம் சகல தொழில்களுக்கும் நீடிக்கப்பட வேண்டுமென்றும், அபிவிருத்தி இலாகாவின் தொழிலாளி வர்க்க விரோதமான கொள்கைகளைக் கண்டித்தும், கைத்தறி நெசவுத்தொழிலாளிகளுக்கு நிவாரணமளிக்கக் கோரியும், பிராவிடண்ட் பண்ட் திட்டம் சகல தொழில்களுக்கும் நீடிக்கப்பட வேண்டுமென்றும், போனஸ் சம்பந்தமான பஞ்சாலை தீர்ப்பை அமுலாக்க வேண்டுமென்று சர்க்காரைக் கோரியும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# தென் பிராந்திய ரயில்வே . . .

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

டும் போடவேண்டும். அந்த ரயில் பாதையைப் போட்டால் அதிகமான ரெயில்வே தொழிலாளிகளுக்கும் வேலை கிடைக்கும். பொது மக்களுக்கும் அதிக நன்மை ஏற்படும் என்றார்.

### தீர்மானங்கள்

1. ரயில்வேயில் ஏற்படும் நாசவேலைகளைத் தடுக்க ரயில்வே நிர்வாகம் தொழிற்சங்கத்தையும் தொழிலாளர்களையும் மதித்து, அவர்களுடன் ஒத்துழைக்க முன்வரவேண்டுமென்று ஒரு தீர்மானம் கோரிற்று.

2. தென் பிராந்திய ரயில்வே லேபர் யூனியனை அங்கீகரிக்காமல் காலம் தாழ்த்தும் ரயில்வே போர்டின் போக்கைக் கண்டித்து உடனடியாக அங்கீகாரம் வழங்கும்படி மற்றொரு தீர்மானம் வற்புறுத்திற்று.

3. இந்த ரயில்வேயில் பழிவாங்கப்பட்டுள்ள 300க்கு மேற்பட்ட தொழிலாளர்களுக்கு உடனடியாக மீண்டும் வேலை கொடுக்க வேண்டுமென்று ஒரு தீர்மானம் வற்புறுத்துகிறது.

மேலும், காங்கி நீளத்தை மீண்டும் 3 மைலாகக் குறைக்கக் கோரியும், காங்கிமென்களின் சாமான்களின் பெட்டியை சவுகரியமாக அமைத்துக் கொடுக்கும்படியும், இரவு வேலை அலவன்ஸ், 5 மைல்களுக்கு அப்பால் போய் வேலை செய்ய நேர்ந்தால் தனி பேட்டா, ஸ்கில்டு கிரேடு, சீனியாரிடிபடி ப்ரமோஷன், இரவில் வேலை செய்யும் காங்கிமென்களுக்கு பேட்ரிலைட், வியாதியை கவனிக்க உடனடி ஏற்பாடுகள், ஒரு வருட சர்வீசுக்கு மேற்பட்டவர்களனைவரையும் உடனே நிரந்தரமாக்குவது, ஒரு மைலுக்கு ஒரு டிபன் ஷெட், நீலகிரி போன்ற குளிர் பிரதேசத்தில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு கம்பளி உடை, மலைவாழ் படி, போன்ற 38 தீர்மானங்கள் இம்மகாநாட்டில் நிறைவேற்றப்பட்டன.

# எட்டுத்திக்கிலும்

# போர் நிறுத்தத்திற்கு புதிய முட்டுக்கட்டை

கொரியாவில் யுத்த நிறுத்தம் ஏற்படுவதற்காக, கொரிய சமாதானத்தை நிலைநாட்டுவதற்காக வடகொரிய - சீனதரப்பினர் விடாப்பிடியாக பாடுபட்டு வரும் அதே சமயத்தில் அமெரிக்க ஏகாதிபத்தியமும், அதன் அடிவருடி சிங்மன் ரீ கும்பலும் யுத்த நிறுத்தம் ஏற்படாதவாறு நித்த நித்தமும் புத்தம் புதிய தடைமதில்களை எழுப்பி வருகின்றனர்.

கொரியப் போர் நிறுத்தத்திற்குப் பெரும் முட்டைக் கட்டையாக விளங்கிய யுத்தக் கைதிகள் பிரச்னையில் ஒரு சமுகமான உடன்பாடு ஏற்பட்டு, கொரியாவில் சமாதானம் ஏற்படும் என்ற நம்பிக்கை உலக மக்களிடையே திடமாக எழுந்தபோது, கையெழுத்திடப்பட்ட உடன்பாட்டை அமெரிக்க ஆதரவுடன் சிங்மன் ரீ கிழித்தெறிந்து விட்டு சுமார் 27,000 வடகொரிய யுத்தக் கைதிகளை நிர்ப்பந்தமாக காவல் முகாம்களிலிருந்து அகற்றிச் சென்று, தன் ராணுவத்தில் சேர்த்துக் கொண்டிருப்பது அனைவரும் அறிந்ததே.

ஐ. நா. உடன்பாட்டிற்குப் புறம்பான சிங்மன் ரீயின் இந்த அடாத செய்கையை உலக நாடுகள் அனைத்தும் வன்மையாகக் கண்டித்தன. சிங்மன் ரீயின் இந்த நடவடிக்கை துரோகத்தனமானது என்று சர்ச்சில் வர்ணித்தார்.

தன் துரோகச் செய்கையின் மூலம் கொரிய யுத்த நிறுத்த ஒப்பந்தத்திற்கே உலை வைத்த சிங்மன்ரீயை மடக்கி வழிக்குக் கொண்டுவர அமெரிக்கா தயாராயில்லை. இதற்குப் பதிலாக சிங்மன்ரீயும், அமெரிக்க ஜனாதிபதி ஐசனோவரின் தூதுவரான ராபர்ட்சனும் கூடிக் கூடிப் பதினாறு நாட்கள் பேசினார்கள். சிங்மன் ரீயை தாஜா செய்து யுத்தநிறுத்தத்தை ஒப்புக்கொள்ளும்படி அமெரிக்கா முயற்சிப்பதாக பறை சாற்றப்பட்டது. போகாத ஊருக்கு வழி தேடுவதுபோல, அமெரிக்க யுத்தக்கொள்ளிகளும், கிழட்டு வெறிநாய் சிங்மன்ரீயும் தாங்கள் விரும்பாத கொரிய சமாதானம் பற்றி நயவஞ்சக நாடகமாடினார்கள்.

தனக்கும் ராபர்ட்சனுக்குமிடையே ஏற்பட்டுள்ள ரகசிய ஒப்பந்தத்தை சிங்மன்ரீ அம்பலப்படுத்திவிட்டார். கொரியப் பேச்சு வார்த்தைகளின்மூலம் இதுவரை கையெழுத்திடப்பட்ட ஒப்பந்தங்களையே திருத்தி மாற்றியமைப்பதற்கு அமெரிக்கா சம்மதம் தெரிவித்திருக்கிறது.

தத்தம் நாடுகளுக்குத் திரும்ப விரும்பாத யுத்தக் கைதிகளைப் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டிய நடுநிலைமைக்கமிஷனிலிருந்து இந்தியா, போலந்து, செக்கோஸ்லோவேகியா முதலிய நாடுகளை நீக்க வேண்டுமென்ற சிங்மன்ரீயின் கோரிக்கைக்கு ராபர்ட்சன் ஒப்புக்கொண்டிருக்கிறார். இதன் மூலம் யுத்தக் கைதிகள்பற்றி ஏற்கனவே கையெழுத்திடப் பட்டிருக்கும் உடன்படிக்கையை அமெரிக்கா கிழித்தெறிந்து விட்டது.

யுத்தநிறுத்தத்திற்குப் பின்னர் நடைபெறும் அரசியல் மகாநாடு முடிவடைவதற்கு முன்னரே அதாவது 90 தினங்களுக்குள் எல்லா அன்னிய தரைப்படை ராணுவமும், கொரியாவிலிருந்து வாபசாக வேண்டும் என்றும், ஆனால் அமெரிக்க கடற்படையும், விமானப் படையும் தென் கொரியாவில் நீடித்து இருக்கும் என்றும் ரகசிய ஒப்பந்தம் கூறுகிறது.

"நாங்கள் யுத்த நிறுத்தத்தை ஒப்புக்கொள்ளமாட்டோம், ஆனால் 90 நாட்கள் வரை, அதற்கு இடையூறு செய்வதில்லையென்று ஒப்புக்கொள்கிறோம்" என்று சிங்மன் ரீ அமெரிக்கப் பத்திரிகை நிருபரிடம் பகிரங்கமாகக் கூறியுள்ளான்.

கொரியாவில் யுத்த நிறுத்தம் ஏற்பட்ட உடனேயே, கொரிய பிரச்னைபற்றி அரசியல் மகாநாடு எத்தகைய முடிவும் செய்வதற்கு முன்னரே, தென்கொரியாவுடன் அமெரிக்கா பரஸ்பர ராணுவஉதவி ஒப்பந்தம் செய்துகொள்ளவும் இணங்கியிருக்கிறது. கொரியப் பிரச்னைக்கு 90 நாட்களில் அரசியல் மகாநாடு ஒரு பரிகாரம் காணவில்லையெனில், வடகொரியாமீது தென்கொரியா தாக்குதல் தொடுக்கும் என்று சிங்மன் ரீ இப்பொழுதே தெளிவுபடுத்திவிட்டான். சிங்மன் ரீயுடன் ராணுவ உதவி ஒப்பந்தம் செய்துகொண்டுள்ள அமெரிக்கா, இத்தகைய தாக்குதலுக்குச் சகல ராணுவ உதவிகளும் செய்யும், போரிலும் இறங்கும்.

3 மாத காலத்திற்குள் கொரியப் பிரச்னைக்குப் பரிகாரம் காண முடியாமல் அரசியல் மகாநாட்டில் முட்டுக்கட்டை போடுவது சிங்மன் ரீக்கு முடியாத காரியமல்ல. இதன்மூலம் மீண்டும் அதிக அமெரிக்க உதவியுடன் வடகொரியாமீது படையெடுத்து, ஆயுத பலத்துடன் கொரியா பூராவையும் ஆக்கிரமித்துக் கொள்ளவே தென்கொரிய யுத்த வெறியன் திட்டமிட்டிருக்கிறான்.

கொரியாவில் சமாதானம் ஏற்படுவதை அமெரிக்க ஆட்சியாளர்கள் விரும்பவில்லை. "கொரியாவில் யுத்தநிறுத்தம் ஏற்பட்டால் நம் கஷ்டங்கள் அப்பொழுது தான் ஆரம்பமாகும்" என்று அமெரிக்க செனட்டர் ஸ்பார்க்மன் அறிவித்திருக்கிறார், "ஐ. நா. சபையில் மக்கள் சீனவை அங்கத்தினராக்கவேண்டுமென்ற கோரிக்கை கொரிய சமாதானத்திற்குப்பின் மிகவும் பலமடையும். நம் தொந்தரவுகளுக்கு ஆரம்பமாக இது அமையும்" என்று அவர் கூறுகிறார்.

யுத்தநிறுத்த ஒப்பந்தத்திற்கு முட்டுக்கட்டை போடும் நீதியில் அமெரிக்காவும், சிங்மன்ரீ கும்பலும் செய்துகொண்ட ரகசிய சதிச் செயலை முறித்தெறியவேண்டும். கொரிய பிரச்னையை சுமுகமாகத் தீர்ப்பதற்காக, உடனடியாக ஐக்கிய நாடுகள் சபையைக் கூட்ட வேண்டியது அத்தியாவசியமாகி விட்டது.

# கம்போடிய மன்னரின் தெருக் கூத்து!

இந்தோ சீனவிலுள்ள வியட்னும், கம்போடியா, லாவோஸ் முதலிய நாட்டு பொம்மை சர்க்கார்களுக்கு அதிக சுயாட்சி அளிக்கப்போவதாக இம்மாதம் 3-ம் தேதியன்று பிரான்ஸ் அறிவித்தது. இதைப்பற்றிச் சீக்கிரம் பேச்சுவார்த்தைகள் நடத்தப்படுமென்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

பிரெஞ்சு ஏகாதிபத்தியத்திற்கு எதிராக வியட்னும் மக்கள் குடியரசு சர்க்கார் கடந்த 7 வருடங்களாக மகோன்னதமான சுதந்திரப் போராட்டம் நடத்தி வருகிறது. லாவோஸிலும், கம்போடியாவிலும் சுதந்திர சர்க்கார்கள் பிரெஞ்சு காலனி வெறியர்களை எதிர்த்துப்போராடி வருகிறார்கள். கடந்த பலமாதங்களாக பிரெஞ்சு ஏகாதிபத்தியம் தோல்விமேல் தோல்வி யடைந்துவருகிறது. வியட்னுமில் பிரெஞ்சு ராணுவ நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது என்பதை பிரெஞ்சு பிரதம சேனாதிபதியே ஒப்புக்கொள்ள நேரிட்டுள்ளது.

இந்தோசீன யுத்தத்திற்காக சகல ராணுவ உதவிகளையும், ஆயுதங்களையும் தற்சமயம் பிரான்சிற்கு அமெரிக்கா கொடுத்து வருகிறது. இந்தோ-சீனவிற்கு பிரான்சின்மூலமாக ஆயுதங்களையும், இதர உதவிகளையும் அனுப்பக்கூடாதென்றும், இந்தோ-சீன பொம்மை நாடுகளுக்கே நேரடியாக அனுப்பவேண்டுமென்றும் அமெரிக்க பணமூட்டைகள் விரும்புகின்றனர். இதன்மூலம் இந்தோசீனவின்மீதுள்ள பிரெஞ்சுப் பிடிப்பைத் தளர்த்தி, தன்னுடைய மேலாதிக்கத்தை இறுக்கிக்கொள்ள அமெரிக்கா முயற்சிக்கிறது. இந்த நோக்கத்துடன் இந்தோசீன பொம்மை சர்க்கார்களுக்கு சுயாட்சி உரிமையளிக்க வேண்டுமென்றுகூட ஒருசில சமயங்களில் அமெரிக்கா கூறியிருக்கிறது. இந்தோசீன விஷயத்தில் அமெரிக்காவிற்கும் பிரான்சிற்குமிடையே முரண்பாடுகள் மோதிக்கொண்டேயிருக்கின்றன.

இந்தோசீனவிலுள்ள மூன்று தேசங்களில் ஒன்ருன கம்போடியாவின் பொம்மை மன்னனுக்கு கடந்த ஒருசில வாரங்களாகத் திடீரென்று சுதந்திரதாகம் ஏற்பட்டிருக்கிறது!

பிரெஞ்சு ஏகாதிபத்திய வாதிகளிடமிருந்து நாட்டை விடுதலை செய்வதற்காக இந்த மன்னர் திடீரென்று தாய்லாந்திற்கு ஓடிப்போனர். பின்னர் அதே விதமாக போனது தெரியாமல் திரும்பி கம்போடியாவிற்கு வந்தார். கம்போடியாவிற்கு சுதந்திரம் வேண்டுமென்று இயக்கம் ஆரம்பிக்கப் போகிறாராம்! 1½ லட்சம் பேர் கொண்ட ராணுவம் திரட்டப்படுமாம்!

கம்போடியா மன்னரின் இந்த ஆர்ப்பாட்டங்களை முதலாளித்துவப் பத்திரிகைகள் பிரமாதமாக விளம்பரப்படுத்துகின்றன. சுதந்திர வீரன் என்று போற்றிப் புகழ்கின்றன.

ஏகாதிபத்திய வாதிகளின், காலனி வெறியர்களின் கைக்கூலி தான் இந்தக் கம்போடிய மன்னன் என்பதை அந்நாட்டு மக்கள் மறந்து விடவில்லை. வியட்னும் பொம்மை மன்னர் பாவ்-டாயைப் போன்றே கம்போடிய மன்னரும் பிறந்ததிலிருந்தே ஏகாதிபத்தியத்தால் ஊட்டி வளர்க்கப்பட்டவர். யுத்தத்தின்போது இவர் ஜப்பானிய ஆக்கிரமிப்பாளருடன் ஒத்துழைத்தார். யுத்தத்திற்குப் பின் மீண்டும் தன் பிரெஞ்சு எஜமானர்களுடன் சேர்ந்து கொண்டார்.

அமெரிக்கக் கைப்பாவையாக இப்பொழுது கம்போடியா மன்னர் செயலாற்றுகிறார். அமெரிக்கத் தூண்டுதலின்பேரில் இவர் பிரான்ஸ்மீது சொற்போர் நடத்துகிறார்.

அமெரிக்க-பிரெஞ்சு ஏகாதிபத்தியங்களிடையே இந்தோ சீனவில் மறைமுகமாக வளர்ந்துவரும் முரண்பாடுகளை, கம்போடிய மன்னரின் இந்த கோமாளிக்கூத்து நிதர்சனமாக்குகிறது.

கம்போடிய மன்னர் நடிக்கும் இந்தத் தெருக்கூத்தில் பொது மக்கள் சற்றும் அக்கறை காட்டவில்லை. இதற்கு பதிலாக கம்போடிய மக்கள் விடுதலை ராணுவத்திற்கு சகல உதவிகளும் பொதுஜனங்கள் அளித்துவருகிறார்கள். ஜனதிபதி சன் கோக் மின்னின் தலைமையில் கீழுள்ள தேசிய ஐக்கிய முன்னணி, பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தையும், அதன் கைக்கூலிகளையும் நிர்மூலமாக்கிவெற்றி மேல் வெற்றிபெற்று வருகிறது. ஆயுதம் தாங்கிய போராட்டத்தின்மூலம் கம்போடிய மக்கள் பிரெஞ்சு வெறியர்களை ஒழித்து வருகிறார்கள்.

தான் அளிக்கும் போலி சீர்திருத்தங்கள்மூலம், இந்தோசீன மக்களை ஏமாற்றி, தன்னுடைய பொம்மை சர்க்கார்களுக்கு அதிக ஆதரவுதேட பிரான்ஸ் முயற்சிக்கிறது. இதன்மூலம் இந்தோசீனவில் நடைபெறும் சுதந்திரப் போராட்டங்களை அடக்கி ஒடுக்க முடியும் என்று பகற்கனவு காண்கிறது. பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தின் இந்த ஆக்கிரமிப்பு ஆசைகள் மண்தின்றுபோகும். வியட்னும், கம்போடிய, லாவோஸ் மக்களின் சுதந்திரப் போராட்ட அக்னியில் இந்தப் போலி சீர்திருத்தங்கள் எரிந்து சாம்பலாகும்.

சத்தியார்த்தி 15-7-53

# சேலம் சிறையிலே நிலைமை படுமோசம்

## விடுதலைக் கிளர்ச்சி வீறுகொண்டெழட்டும்!

அரசியல் கைதிகளின் விடுதலை இயக்கம், நாடுமுழுவதும் அலையலையாய் வீசியடிக்கும்போது சட்டசபையிலும் எதிர்க்கட்சித் தலைவர்கள் பலமாக நெருக்குகிறபோது, "பொறுத்திருங்கள்! என் உள்ளத்தில் அன்பு சுரக்கட்டும்" என்று பதில் அளிப்பார் பிரதமர் ராஜாஜி. சில பல மாதங்கள் சென்றபின் அங்கொன்றும் இங்கொன்றுமாக சிலரை விடுதலை செய்துவிட்டு, அரசியல் கைதிகள் அனைவரையுமே விடுதலை செய்துவிட்டது போன்ற ஒரு தோற்றத்தைச் சிருஷ்டித்து மக்களை ஏமாற்றுவார். எவ்வி வரும் அலையை தணிப்பதற்கு அவர் மேற்கொள்ளும் "சாணக்கிய" தந்திரமிது.

### இயக்கம் இன்றேல் சிறைக் கதவு திறக்காது

மக்களுடைய இயக்கம் மேலும் மேலும் அலைமோதாவிட்டால், ராஜாஜியின் உள்ளத்திலே அன்பு சுரக்காது. சிறைக் கதவும் திறக்காது என்பது அனுபவம்.

தொழிலாளர்களே! விவசாயிகளே! பொதுமக்களே! உழைப்பாளி வர்க்கத்தின் தலைசிறந்த புதல்வர்கள் வெஞ்சிறைக்கூடங்களில் வருடக்கணக்காய் அங்குலம் அங்குலமாக சாகடிக்கப்படுவதை அனுமதிக்கப்போகிறீர்களா? அனுமதிக்கமாட்டோமென்ற குரல் முன்னைவிட பலமாக விண்முட்ட ஒலிக்கட்டும். ஏனென்றால் சிறைத் தோழர்களுடைய தேக நிலைமை படுமோசமாகி விட்டது.

### நோயுற்ற தோழர்கள்

20 வருடம் தண்டிக்கப்பட்ட வீரய்யன், குடல் புண்ணால் அவதிப்படுகிறார். 22 பவுண்டு குறைந்துவிட்டார். அப்படியானால் அவர் நிலை எப்படியிருக்கும்!

ஆயுள் தண்டனை விதிக்கப்பட்ட வைரவனுக்கு தொடர்ச்சியாக வயிற்றுப்போக்கு. 9 பவுண்டு குறைந்துவிட்டார்.

அழகு (20 வருடம்) கண்நோய், 7 பவுண்டு குறைவு. முத்துப்பிள்ளை (20 வருடம்) தோல் வியாதியால், கஷ்டப்படுகிறார்; நடக்கவும் முடியாது. சிவசாமி (20 வருடம்) 7 பவுண்டு குறைவு. பழனிவேல் (3 வருடம்) நெஞ்சு வலி; 9 பவுண்டு குறைவு. சிங்காரவேலு (3 வருடம்) மூலநோயால் கஷ்டப்படுகிறார். வேலு (7 வருடம்) வயிற்று வலி பொறுக்காமல் அவஸ்தைப் படுகிறார்; 7 பவுண்டு குறைந்துவிட்டது. ராமுவுக்கு காலில் பத்து. சங்கரன் (7 வருடம்) பத்து. கண்ணுக்குட்டி (3 வருடம்) வயிற்றுக் கோளாறு. ஜோஸப் (20 வருடம்) 10 பவுண்டு குறைந்து விட்டார். மருதை (20 வருடம்) 15 பவுண்டு குறைந்துவிட்டார். மொட்டையன் (20 வருடம்) 9 பவுண்டு குறைந்துவிட்டார். வீரன் (ஆயுள் தண்டனை) 9 பவுண்டு குறைந்து விட்டார்.

### பிணி பிடிக்க - உடல் உடைய காரணமென்ன?

சி. கிளாஸ் வாழ்க்கை! போதிய போஷாக்குள்ள உணவு கிடையாது. போதிய வைத்திய வசதியும் கிடையாது. போதிய வைத்திய வசதியும் கிடையாது. இந்த நிலையில் தொடர்ச்சியாக 5, 6 வருடங்களாக சிறைச்சாலையில்-அதுவும் சேலம் சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் கைதுசெய்யப்பட்ட போதும்-சிறைக்குள்ளும் நடைபெற்ற சித்ரவதைகளிலும் லத்திசார்ஜ்களிலும் படுகாயப்பட்டு பலவிதமான பிணிகளுக்கு ஆளாகியிருக்கிறார்கள்.

**நிலைமை கேவலமடையுமுன்பே இவர்களை உடனே விடுதலை செய்யவேண்டும்.**

**இதற்கிடையில் அவரவர்களுடைய ஜில்லா சிறைகளுக்கு மாற்றி, அரசியல் கைதிகளாக நடத்தவேண்டும்.**

## இரணியனின் தோழன் எஸ். ஏ. முருகையனுக்கு 7 வருட கடுங்காவல்

தஞ்சை ஜில்லா விவசாயி தலைவர்கள் இரணியன், எஸ். ஏ. முருகையன் மற்றும் 72 ஊழியர்களை செம்பாலூர் கொள்ளை வழக்கில் ஈடுபடுத்தியது காங்கிரஸ் போலீஸ். 1950 பிப்ரவரியில் உழவர் தலைவன் இரணியன் காங்கிரஸ் போலீஸால் சுட்டுக்கொல்லப்பட்டார். 72 ஊழியர்கள் பல்வேறு தண்டனைகளுக்கு ஆளானர்கள்.

தோழர் முருகையன் கடந்த 5 வருஷங்களாக தலைமறைவாக இருந்துவிட்டு 27-2-53ல் கோர்ட்டில் ஆஜரானர். 4 மாத விசாரணைக்குப் பின் தோழர் முருகையனுக்கு 7 வருட கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

அரசியல் கைதிகளை விடுதலை செய் என்ற கோஷம் எட்டுத் திக்கிலும் இடியென முழங்கட்டும். விடுதலையாகும்வரையும் மேலும் மேலும் கிளர்ச்சி அலை உயரட்டும்.

✽

## கே. பி. நடராஜனுக்கு ரூ. 1000 ஜாமீன்!

தஞ்சை ஜில்லா விவசாய சங்க காரியதரிசி தோழர் கே. பி. நடராஜன், மணக்கால் நாராயணசாமி, எணங்குடி சௌரிராஜன் ஆகியோர்மீது நாகை சப்-டிவிஷன் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் 107 ஜாமீன் வழக்கு நடைபெற்று வந்தது. தோழர் கே. பி. நடராஜனுக்கு ஒரு வருடத்துக்கு ரூ. 1000 ஜாமீன் வாங்கிக்கொண்டு, மற்றிருவரையும் விடுவித்திருக்கிறார்கள்.

✽

## கீழநத்தம் கேஸ் வாபஸ்

### விவசாயி தலைவர்கள் விடுதலை!

நிலவெளியேற்றத் தடைச் சட்டத்தை சிதம்பரம் தாலூகாவுக்கும் விஸ்தரிக்க வேண்டுமென்று விவசாயி மக்கள் நடத்திய போராட்டம் வெற்றியில் முடிந்தது. அப்போராட்டத்துக்குத் தலைமை தாங்கிய 88 ஊழியர்கள்மீது காங்கிரஸ் சர்க்கார் கொள்ளைக் கேஸ் தொடுத்தது. கீழ் கோர்ட்டில் 41 பேர் கேஸிலிருந்து நீக்கப்பட்டு, பாலசுப்ரமணியம், சோமசுந்தரம், விஸ்வநாதன், ஜெயராமன், உப்பு பூவராக மூர்த்தி, எஸ். ஏ. நடராஜன் மற்றும் 41 பேர் மீது செஷன்ஸ் கோர்ட்டில் மாதக்கணக்கை நடைபெற்று வந்தது. அவ் வழக்கை 10-7-53ல் சர்க்கார் வாபஸ் செய்துவிட்டது. அனைவரும் விடுவிக்கப்பட்டனர்.

✽

## அடக்குமுறை

அரசியல் கைதிகளை விடுதலை செய்!—என்ற சுலோகத்தை சித்தூர் நகரின் சுவர்களிலும் தார்வீதிகளிலும் எழுதியதற்காக காதர், தாமோதரம், மூர்த்தி, ஈஸ்வரன், கிருஷ்ணன், துரைக்கண்ணன், பாலசுப்ரமணியன் ஆகிய ஏழுபேர்களைக் கைது செய்து காங்கிரஸ் போலீஸார் கேஸ் தொடுத்திருக்கிறார்கள்.

* அரசியல் கைதிகளை விடுதலை செய்!
* அடக்குமுறை ஒழிக!

## புதிய கல்வி . . .

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

இந்த விசித்திரமான திட்டத்தைப் பாராட்ட யாருமே இல்லை. பொதுஜன அபிப்பிராயத்தையும், எம். எல். ஏக்களின் ஆலோசனையையும், சட்டசபையையும், கல்வித் துறையில் அனுபவம் முதிர்ந்த ஆசிரியர்களையும் அவமதித்து, தானடித்த மூப்பாக இந்த நூதனமான திட்டத்தைப் புகுத்தியுள்ள ராஜாஜியின் போக்கைக் கண்டு மக்கள் வெறுக்கிறார்கள். வெஞ்சினம் கொள்கிறார்கள்!

## சென்னை சட்ட சபையிலே

# ஆந்திரபிரிவினையுடன் ஐக்ய தமிழகம்வேண்டும்

மொழிவழி ராஜ்ய சகாப்தம் ஆரம்பமாகிறது. சென்ற 40 வருஷகாலமாக ஆந்திர மக்கள் கண்ட கனவான ஆந்திர ராஜ்ய அமைப்பு மசோதா ஜூலை 14ல் சட்டசபை விவாதத்திற்கு வந்துள்ளது. சென்னை சட்டசபை விவாதம் முடிந்தபின் பார்லிமெண்டில் அது சட்டமாக்கப்படும். பொட்டி ஸ்ரீராமுலுவின் தியாகமும் லட்சோப லட்சம் ஆந்திர மக்களின் வீரப்போராட்டங்களும், இந்தியாவெங்கும் மொழிவழி ராஜ்யங் கோரும் கோடிக்கணக்கான மக்களின் இடைவிடா இயக்கமும் வெற்றியடைந்துவிட்டது. இந்த வெற்றியை உருவாக்குமுன் ஆளுங்கூட்டமான காங்கிரஸ் ஆட்சியின் மிருகத்தனமான அடக்குமுறைக்கும் சகோதரச் சண்டைகளை மூட்டும் பிளவுச் சூழ்ச்சிகளுக்கும் இரையாக வேண்டி இருந்தது. ஆனல் அடக்குமுறையையும், பிளவுச் சூழ்ச்சிகளையும், இனவெறிக் கிளர்ச்சிகளையும் மடக்கி வெற்றிக் கொடி உயர்த்திவிட்டனர் ஆந்திர மக்கள்.

### இன்னும் தில்லுமல்லு திருகுதாளம்

இந்த மசோதாவை வரவேற்கும் அதேசமயத்தில் மொழிவழி மாகாண அமைப்பின் பரம எதிரியான ராஜகோபாலாச்சாரியின் சூழ்ச்சிகள் மசோதாவின் பல்வேறு ஷரத்துக்களில் பிரதிபலிப்பதை எடுத்துக்காட்டுவது அவசியமாகிறது. முதலில் இந்த மசோதாவை விவாதிக்க உதவிகரமாக சர்க்கார் கொடுக்க வேண்டிய புள்ளி விவரங்களைக் கொடுக்க மறுத்தார், ஆங்கிலம் தெரியாதவர்களும் விவாதிக்க உதவிகரமாக பிரதேச மொழிகளில் அம்மசோதாவை அச்சடித்துத் தரவும் மறுத்தார். ஆந்திர தமிழ் கம்யூனிஸ்டு எம். எல். ஏ.க்களும், மற்றவர்களும் சுட்டிக்காட்டியபடி, இரு மாகாணங்களுக்கு மிடையே மனக்கசப்பை ஊட்டும் விதத்திலே சொத்து, கடன் போன்ற பிரிவினைகளிலும் சூழ்ச்சி செய்துள்ளனர்.

இது மட்டுமல்ல, எல்லைப் பிரச்னைகளைத் தீர்க்க எல்லைக் கமிஷன் நியமிப்பதாக வாக்குறுதி அளித்தபோதிலும் அதை இந்த மசோதாவிலே குறிப்பிடவும் மறுத்து இனவெறிக் கிளர்ச்சிக்கு மேலும் தூபமிட முயன்றனர், குறிப்பாக கம்யூனிஸ்டுஎம்.எல்.ஏக்கள் இதைச் சுட்டிக்காட்டி வன்மையாகக் கண்டித்தபின், ராஜாஜி எல்லைக்கமிஷன் நியமிக்கும் திருத்தத்தை ஏற்பதாகக் கூறினர்.

### தோழர் வெங்கடேஸ்வரலு

தோழர்வெங்கடேஸ்வரலுபேசுகையில் பிரியும்போது நண்பர்களாகப் பிரியவேண்டுமென்றும், அதற்குமுன் ஆந்திரப் பிரிவினைக் கிளர்ச்சியில் கைது செய்யப்பட்டோ தண்டிக்கப்பட்டோ உள்ள அனைவரையும் விடுதலை செய்ய வேண்டுமென்றும் கூறினர். அடுத்தடுத்துப் பேசி ஒவ்வொரு கம்யூனிஸ்டு எம். எல். ஏ.யும் ஆந்திர மக்களின் விருப்பத்திற்கு விரோதமாக கர்னூலைத் தலைநகராக்கியதைக் கண்டித்து அந்த முடிவை மாற்றவேண்டுமென்று வற்புறுத்தினர்.

### ஐக்கிய தமிழகம் வேண்டும்

அடுத்துப் பேசிய தோழர் ஜீவா' "ஆந்திர மாகாணம் அமைப்பை ஆந்திரர்கள் மட்டுமின்றி எல்லா தேசிய இனத்தவரும் ஜனநாயக உணர்ச்சியுள்ளவரும் வரவேற்கின்றனர்" என்ருர்.

"இது ஏதோ மத்திய அரசாங்கத்தின் வரப்பிரசாத மல்ல. வீரப் போராட்டங்கள் நடத்திப் பெற்ற வெற்றி அது. ஹைதராபாத் காங்கிரஸ் கூட்டத்தில் மொழிவாரி மாகாணக் கோரிக்கையைப் புராதனகால எண்ணம் என்று கூறிய முதல் மந்திரி இன்று ஆந்திர மசோதாவை பிரரேபிக்கும் அளவு மக்களின் ஜனநாயகப் போராட்டம் வலுப்பெற்று முன்னேறியுள்ளது" என்ருர்.

"இன்று பிரரேபிக்கப்பட்டுள்ள மசோதாவில் உள்ள குறைபாடு எல்லைக்கமிஷன் நியமிக்கப்படுவது பற்றி பிரஸ்தாபம் இல்லாதது. தவிர, சொத்து, ஆஸ்தி, கடன், சிப்பந்திகள் ஆகிய எந்தப் பிரச்னையை எடுத்தாலும், சிக்கல் காணப்படுகிறது. ஆந்திரா மாகாணம் சரியாக வேலை செய்யவேண்டும் என்ற நோக்கம் அதில் பிரதிபலிக்கவில்லை" என்று ஆளுங் கூட்டத்தின் சூழ்ச்சியை அம்பலப்படுத்தினர்.

### சர்க்காரின் சூழ்ச்சி

ஆந்திர மாகாணத்தை பலஹீனமானதென்று காட்டி விட்டால், ஐக்கிய தமிழகம், ஐக்கிய கேரளம், சம்யுக்த மகாராஷ்டிரம் ஆகிய மொழிவழி மாகாணங்களைத் தடுத்து விடலாம் என்பது ஆட்சி பீடத்திலுள்ளவர்களின் நோக்கம் இந்த நோக்கத்தை மாற்றியாக வேண்டும் என்ருர்.

இதுமட்டுமல்ல. மொழிவழி ராஜ்ய மேற்படுவதைத் தடுக்க ஆச்சாரியார் ஆட்சி சகல முயற்சியும் செய்து வருகிறது. உதாரணமாக திரு-கொச்சி ராஜ்யத்தை அங்குள்ள மக்களின் ஏகோபித்த விருப்பத்திற்கு எதிராக சென்னையுடன் இணைத்து ஐக்கிய தமிழகம், ஐக்கிய கேரளம் அமையாமல் செய்ய ஆச்சாரியார் முயலுகிருர் என்று ஜீவா எடுத்துக்காட்டினர்.

இந் நாட்டின் தேசிய கீதத்திலேயே ராஜ்ய அமைப்புகளை மொழியின் அடிப்படையில் கூறப்படுகிறது என்பதைக் கூறி, தேசியப் பாரம்பரையை விளக்கினர்.

மொழிவழி மாகாணத்தால் நாட்டு ஐக்கியத்திற்கு ஆபத்து இல்லை, தன்னிச்சையாக ஒன்றுபடும் மொழிவழி ராஜ்ய மக்களின் ஒற்றுமை உறுதியாகவே இருக்குமென்பதில் சந்தேகமில்லை என்று தெளிவு படுத்தினர்.

ஆந்திர மாகாண அமைப்பு ஐக்கிய தமிழக அமைப்பை துரிதமாக்குமென்பதில் சந்தேகமில்லை. எந்த சக்திகள் ஆந்திர மாகாண அழைப்பைத் தூண்டியதோ அதே சக்திகள் ஐக்கிய தமிழகம் அமைவதைத் துரிதப்படுத்தும் என்று கூறி ஐக்கிய தமிழகக் கிளர்ச்சியை வலுவடையச் செய்ய வேண்டுமென்று வற்புறுத்தினர் தோழர் ஜீவா.

எல்லைக்காக சகோதரச் சண்டைபோட வேண்டிய அவசியமில்லை ஜனநாயக முறைப்படி, ஆந்திரர் தமிழர் நலன்களைப் பாதுகாக்கும்விதத்தில் இந்த எல்லைப் பிரச்னையைத் தீர்த்துக் கொள்ள முடியும் என்று தோழர் ஜீவா கரகோஷத்திற்கிடையே பேசி முடித்தார்.

### தோழர் மணலி

தோழர் மணலி கந்தசாமி பேசுகையில் ஆளும் கட்சிக்கும், இதர கட்சிகளுக்கும் இப்பிரிவினை மசோதா ஒரு எடுத்துக்காட்டு, எச்சரிக்கை, படிப்பினை என்ருர்.

ஆந்திரப் பிரிவினை இயக்கமும், கிளர்ச்சியும் கடந்த 30 வருஷங்களாக நடைபெற்றுவந்த பிறகு தற்போது ஆந்திரா பிரிவது சரித்திரபூர்வமான சாதனை ஆகும், ஆந்திரப் பிரிவினையின் வெற்றி இதர மக்களையும் மொழிவழி மாகாணப் பிரிவினைக்கான கிளர்ச்சியையும் தூண்டியுள்ளது என்ருர்.

மக்களுடைய இந்த மனக்குமுறலை சர்க்கார் அறிந்துகொண்டு அதன்படி தங்களுடைய பிடிவாதக் கொள்கையை விட்டுக்கொடுத்து மொழி அடிப்படையில் மாகாணங்கள் பிரிக்கப்படவேண்டும் என்ருர்.

எல்லையோரங்களிலுள்ள மக்களை மோதவிட்டு அதனல் ஏற்படும் குழப்பம் வளருவதற்கு முன்பே எல்லைக் கமிஷன் நியமித்திருக்கவேண்டியது சர்க்காரின் கடமை என்ருர்.

யாரையும் கேட்காமல் கல்வித் திட்டத்தை முதன் மந்திரி கொண்டுவருவது ஒரு பக்கம். தலைநகரை நீங்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள் என்று ஆந்திரத் தலைவர்களையும், மக்களையும் மோதவிடுவது மற்ருெரு பக்கம். இதுபோன்ற முன்னுக்குப் பின் முரணைகொள்கையை இந்த சர்க்கார் அனுஷ்டிக்கின்றனர். ஆனல், அது மக்களின் எழுச்சிமுன் தகர்க்கப்படும் என்று தோழர் மணலி முழங்கினர்.

இதற்கு பின் ராஜாஜி எல்லைக் கமிஷன் நியமிக்கும் திருத்தம் ஒன்றை சர்க்காரே பிரரேபிக்கப் போவதாக அறிவித்தார்.

மசோதாவிற்குப் பல திருத்தங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அவைகளில் பிரிவினைக்குப் பிறகு சென்னை மேல் சபையைக்கலைத்து விட வேண்டுமென்பதும் ஒன்று.

விவாதம் மேலும் தொடர்ந்து நடக்கிறது. மேல் விபரம் பிறகு தரப்படும்.

---

## 'ஜனசக்தி'க்கு நன்கொடை

| | |
|---|---|
| எம். எஸ். எம். கனி, வண்டிப்பெரியார் (சிகிச்சைக்காக மாஸ்கோவிற்குச் சென்று, குணமடையாமல் உயிர்நீத்த புரட்சிக் கவி தோழர் ரஷீதாவின் நினைவாக, தோழர் கனி தனக்குப் பிறந்த பெண் மகவிற்கு அந்தப் பெயர் சூட்டிய போது அளித்தது.) | 5 0 0 |
| சீர்காழி தோழர் அண்ணங்கார் மூலம் | 20 0 0 |
| சீர்காழி தோழர் கே. எஸ். சுப்பையாவின் திருமணத்தின் போது | 5 0 0 |
| அகமதாபாத் தோழர்கள் பீட்டர் பென்ஜமின்—கேதரைன் அவர்களின் திருமணத்தை முன்னிட்டு ஜனசக்திக்கு நிதி கொடுத்தது | 5 0 0 |
| ஆகமொத்தம் ரூ. | 35 0 0 |

---

# ஜனவிரோதி பெரியா கைது

## அதிகாரத்தை கைப்பற்ற செய்த சூழ்ச்சி அம்பலம்

*சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் முடிவுகளையும் சோவியத் சர்க்காரின் உத்திரவுகளையும் பகிரங்கமாக எதிர்த்துப் புறக்கணித்த ஜனவிரோதி பெரியா சோவியத் கம்யூனிஸ்ட கட்சியிலிருந்து நீக்கப்பட்டான்.*

*தன் பதவியை உபயோகித்துக்கொண்டு அரசாங்க அதிகாரத்தைக கைப்பற்றி, கம்யூனிஸ்ட் கட்சியை ஒழித்து சர்வதேச ஏகாதிபத்திய நலன்களுக்கு ஒத்தமுறையில் சோவியத் நாட்டில் மீண்டும் முதலாளித்துவத்தை நிலைநாட்டுவதற்கான கொள்கையைக் கடைப்பிடித்த லாவ்ரெண்டி பாவ்லோவிச் பெரியா உள்நாட்டு மந்திரிப் பதவியிலிருந்தும் நீக்கப்பட்டான்.*

சோவியத் சர்க்காருக்கும், கட்சிக்கும் பெருந் துரோகம் செய்துள்ள பெரியா மீது நடவடிக்கை எடுப்பதென சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டியின் பிளீனம் கூட்டம் ஏகமனதாக தீர்மானித்தது. மறுக்கமுடியாத அத்தாட்சிகளின் அடிப்படையில், குற்றம் சாட்டப்பட்டுள்ள துரோகி பெரியா கைது செய்யப்பட்டுள்ளான். சோவியத் சுப்ரீம் கோர்ட்டில் பகிரங்க விசாரணை நடைபெறும்.

சோவியத் உள்நாட்டு மந்திரியாக தோழர் செர்கி நிகிபரோவிச் குருக்லோவ் நியமிக்கப்பட்டுள்ளார்.

துரோகி பெரியாவின் சதிச் செயல்களை அம்பலமாக்கி சோவியத் கம்னிஸ்ட் கட்சியின் தினஇதழான பிராவ்டா தலையங்கம் எழுதியிருக்கிறது.

"இன்று முகமூடி கிழிந்து அம்பலமாகி யிருக்கும் ஜனவிரோதி பெரியா, பதவிப் பித்துப் பிடித்து பல்வேறு தந்திர சூழ்ச்சிகளின் மூலம் தன்மீது கட்சி நம்பிக்கை வைக்கும்படி முதலில் நடந்து கொண்டான்; கொஞ்சம் கொஞ்சமாக தலைமைப் பதவியையும் எட்டிப் பிடித்தான். கட்சிக்கும், சோவியத் சர்க்காருக்கும் குழிபறிக்கும் தன்னுடைய துரோக நடவடிக்கைகளை முதலில் மிகவும் ஆழமாக மறைத்து வைத்திருந்தான்; சாமர்த்தியமாகத் திரையிட்டு இருட்டடிப்பு செய்திருந்தான். சமீபகாலத்தில் கொழுத்துத் துணிச்சல் கொண்டுவிட்ட பெரியா தன்னுடைய உண்மை சொரூபத்தைக் காட்ட ஆரம்பித்தான். சோவியத் கட்சிக்கும், மக்களுக்கும் விரோதமான தன்னுடைய நடவடிக்கைகளில் பகிரங்கமாக இறங்கத் துணிந்துவிட்டான்" என்று பிராவ்டாவின் தலையங்கம் கூறுகிறது.

### அதிகாரத்தைக் கைப்பற்ற சூழ்ச்சி

தலையங்கம் மேலும் கூறுவதாவது:—

"கம்யூனிஸ்ட் கட்சியின் கட்டுப்பாட்டிற்கும், சோவியத் சர்க்காரின் அதிகார வரம்பிற்கும் உட்படாததுபோல, தன்னுடைய உள்நாட்டு மந்திரி இலாக்காவை பெரியா நடத்தத் தலைப்பட்டான். தனிப்பட்ட முறையில் தனக்கு மட்டும் விசுவாசம் தெரிவிக்கும் நபர்களை உள்நாட்டு மந்திரி இலாக்காவிற்குப் பொறுக்கி எடுப்பதன் மூலம், உள்நாட்டு இலாக்காவின் ஸ்தல, கேந்திர ஸ்தாபனங்களை கம்யூனிஸ்ட் கட்சிக்கும், அதன் தலைமைக்கும், சோவியத் சர்க்காருக்கும் எதிராகத் திருப்பிவிட முயற்சித்தான். இத்தகைய மிகவும் இழிவான தன் தந்திர சூழ்ச்சிகளின்மூலம் அரசாங்க அதிகாரத்தைக் கைப்பற்ற பெரியா சதித் திட்டமிட்டான்.

விவசாயத்துறையில், மிகவும் முக்கியமான அவசரப் பிரச்னைகள் பற்றி எடுக்கப்பட்ட முடிவுகளை பொய்யான பல்வேறி சாக்குப் போக்குகளைக் கூறி பற்பல வழிகளில் பெரியா நிராகரித்துவிட்டான் என்பது இப்பொழுது நிரூபணமாகியுள்ளது.

கூட்டுப்பண்ணை திட்டங்களுக்குக் குழிபறித்து நாட்டின் உணவு உற்பத்தியில் பல்வேறு கஷ்டங்களை சிருஷ்டிக்கும் நோக்குடன் இத்தகைய காரியங்களைச் செய்ய பெரியா முன்வந்தான்.

சோவியத் மக்களுக்கிடையேயுள்ள அறுக்கமுடியாத நேசஒப்புக்கொண்டிருக்கிறது.

உறவை, பாசபந்தங்களைச் சீர்குலைத்து, பற்பல தேசீய இன மக்களிடையே விரோதபாவங்களைப் புகுத்தி, தேசீயஇனக் குடியரசுகளிலுள்ள பூர்ஷ்வா தேசீய வாதிகளைத் தட்டியெழுப்புவதற்காக லாவ்ரென்டி பெரியா பல்வேறு நரித்தந்திர சதித் திட்டங்கள்மூலம் முயற்சித்தான்.

### ஏகாதிபத்திய கைக்கூலி பூர்ஷ்வா ஒடுகாலி

சோவியத் சட்டத்தைப் பலப்படுத்துவது சம்பந்தமாகவும், சட்டத்திற்குப் புறம்பாக தன் மூப்பாக எடுக்கப்பட்ட ஒருசில நடவடிக்கைகளை சீர்ப்படுத்தி ஒழுங்கு செய்வதுபற்றியும் கம்யூனிஸ்ட் கட்சியும், சோவியத் சர்க்காரும் பிறப்பித்திருந்த நேரடியான உத்திரவுகளை நிறைவேற்ற வேண்டிய நிர்ப்பந்தமான பொறுப்பு ஏற்பட்ட சமயத்தில், இத்தகைய உத்திரவுகளை நிறைவேற்ற விடாமல் பெரியா வேண்டுமென்றே குந்தகப்படுத்தினன். பல சமயங்களில் உத்திரவுகளை வேண்டுமென்றே உருமாற்றித் திரித்துக்கூறினன்.

கம்யூனிஸ்ட் பண்புகளை இழந்துவிட்ட பெரியா, சர்வதேச ஏகாதிபத்தியத்தின் கைக்கூலியாக, பூர்ஷ்வா ஓடுகாலியாக உருமாறிவிட்டான் என்பதை மறுக்க முடியாத உண்மைகள் நிரூபிக்கின்றன.

கம்யூனிஸ்ட் கட்சியை அழித்து ஒழித்துவிட்டு, கட்சியின் கொள்கைகளுக்குப் பதிலாக சரணகதிக் கொள்கைகளைக் கடைப்பிடித்து, இறுதியில் மீண்டும் முதலாளித்துவத்தை நிலைநாட்டும் நோக்கங்களுடன், நீசத்தனமான சுயநல வேட்டைக்காரனும், அன்னிய ஏகாதிபத்திய சக்திகளின் அடிவருடியுமான துரோகி பாவ்லெண்டி பெரியா திரைமறைவில் திட்டங்கள் பல போட்டான்.

சரியான சமயத்தில், தகுந்த நடவடிக்கைகளை எடுப்பதன் மூலம் இந்தச் சதித்திட்டங்கள் அனைத்தையும் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமைக்குழு தகர்த்தெறிந்துவிட்டது. தலைமைக் குழுவின் இந்த நடவடிக்கையை, கட்சி மத்தியக் கமிட்டியின் விரிவடைந்த கூட்டம் ஏகமனதாக

பெரியாவின் சர்வ நாசத்திட்டங்கள் அனைத்தும் ஈவு இரக்கமின்றி ஒழிக்கப்பட்டன. கட்சிக்கும், சர்க்காருக்கும், சோவியத் மக்களுக்குமிடையேயுள்ள அழிக்க முடியாத வல்லமை வாய்ந்த மகத்தான ஒற்றுமைக் கெதிராக, அன்னிய ஏகாதிபத்திய சக்திகள் திட்டமிடும் சதிச்செயல்கள் அனைத்தும் தவிடு பொடியாக்கப்பட்டன; மேலும் தவிடுபொடி யாக்கப்படும் என்பதற்கு பெரியாவின் கதி சாலச் சிறந்ததோர் உதாரணமாகும்" என்று பிராவ்டாவின் தலையங்கம் கூறுகிறது.

### கண்காணிப்பைத் தீவிரப்படுத்துக!

உலகில் முதலாளித்துவம் நீடித்திருக்கும் வரையில், ஏகாதிபத்திய உளவாளிகளுக் கெதிராக மிகுந்த கண்காணிப்புடன் இருக்கவேண்டுமென்று பிராவ்டா வற்புறுத்துகிறது. ஒவ்வொரு கட்சி உறுப்பினரும், அவர் எத்தகைய பெரிய பதவியில் இருந்தபோதிலும், கட்சிக் கட்டுப்பாட்டைத் தட்டிக்கழிக்க முடியாது என்று பிராவ்டா உறுதியாகக் கூறுகிறது. கட்சிக்கும், மக்களுக்குமிடையேயும், பல்வேறு தேசீய இன மக்களுக்கிடையேயும் மிகவும் நெருக்கமான நேச உறவுகளைக் கட்டிவளர்க்க வேண்டுமெனப் பிராவ்டா அறைகூவல் விடுத்துள்ளது.

சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் இந்த மிக முக்கியமான நடவடிக்கையை, கட்சி உறுப்பினர்கள் அனைவரும், சோவியத் மக்களும் பரிபூரணமாக ஆதரிக்கிருர்கள். சோவியத் யூனியன் பூராவிலும் பொதுக்கூட்டங்கள் நடத்தப்பட்டு, பெரியாவின் துரோக நடவடிக்கைகள் வன்மையாகக் கண்டிக்கப்படுகின்றன.

மாஸ்கோ நகர, மாஸ்கோ பிரதேச கட்சி உறுப்பினர்கள், தீவிர ஊழியர்களின் கூட்டுப் பொதுக் கூட்டம் நடத்தப்பட்டது. பெரியாவின் துரோகச் செயல்களுக்கு எதிராக எடுக்கப்பட்ட ஒழுங்கு நடவடிக்கைகளை கட்சி உறுப்பினர்களின் பொதுக்கூட்டம் ஏகமனதாக ஆதரித்தது. இதேபோல் லெனின்கிராடு, கீவ், மின்ஸ்க், முதலிய எண்ணற்ற நகரங்களிலும், கிராமங்களிலும் நடைபெற்ற கட்சி ஊழியர்களின் பொதுக்கூட்டங்கள், கட்சித் தலைமையின் இந்த நடவடிக்கையை ஆதரித்திருக்கின்றன.

# எட்டுத்திக்கும் எதிர்ப்பு

## பிற்போக்கு கல்வித் திட்டம்

### சுக்கல் சுக்கலாய் நொறுங்குது

*இந்த ராஜ்யத்திலே 375 பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு சட்டசபை இருக்கிறது. அதன் யோசனையைக் கேட்டாரா? இல்லை! தான் அங்கம் வகிக்கும் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி இருக்கிறதே! அதையாவது கேட்டாரா? அதுவுமில்லை! ஆசிரியர் சங்கங்கள் உள்ளன - மாணவர் சங்கங்கள் உள்ளன - கல்வி நிபுணர்கள் இருக்கிறார்கள் - தொழிற்சங்கங்கள், விவசாய சங்கங்கள் - அரசியல் கட்சிகள் அனைத்தும் உள்ளனவே - பத்திரிகைகளும் பக்கம் பக்கமாய் வெளிவருகின்றனவே - தான் கொண்டுவரும் "குலத் தொழில் கல்வித் திட்ட" விஷயமாக இவர்களின் அபிப்பிராயம் என்னவென்று கேட்டாரா ராஜாஜி? கேட்கவில்லை! அது அவருடைய அமெரிக்க மாடல் ஜனநாயகம்! ஆனால் உயிரும் உயிர்த் துடிப்பும் உள்ள இந்த ராஜ்ய மக்கள் ராஜாஜியின் பிற்போக்கு கல்வித் திட்டத்தை அனுமதிப்பதாயில்லை.*

*முற்போக்கு திசையில் முன்னேறிச் செல்லும் மக்கள், ராஜாஜியின் யதேச்சாதிகாரத்தை எதிர்த்து ஒவ்வொரு நகரிலும் - ஒவ்வொரு கிராமத்திலும் கொந்தளித்து எழுகிறார்கள்.*

**தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சி, தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ், தமிழ்நாடு விவசாய சங்கம் ஆகியவை விடுத்த அறைகூவலை ஏற்று, எங்கும் கண்டன அலைகள் கிளம்பிய வண்ணமிருக்கின்றன.**

ராஜாஜியின் கல்வித் திட்டத்தைக் கண்டித்து எண்ணற்ற கூட்டங்களிலே நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களும் கையெழுத்துக்களும் ஏராளமாக குவிந்தவண்ணமிருக்கிறது.

#### சீர்காழித் தாலுகாவிலே

"புதிய கல்வித் திட்டம் எங்கள் குழந்தைகளை படித்து அறிவு பெறக்கூடாது என்றும், மேல் படிப்புக்குப் போகக்கூடாது என்றும் தடை விதிக்கிறது. இதை உடனே வாபஸ் வாங்கவேண்டும்! இலவச ஆரம்பக் கல்வியும், 14-வயது வரை கட்டாயக் கல்வியும் அமுலுக்குக் கொண்டுவர வேண்டும் என்று அச்சடிக்கப்பட்ட நூற்றுக் கணக்கான பாரங்களில் தாலுகா முழுவதும் சகல கிராமங்களிலும் ஆயிரமாயிரம் விவசாயிகள் கையெழுத்திட்டு முதல் மந்திரி, கல்வி மந்திரி ஜில்லாக் கலெக்டர், எதிர்க்கட்சித் தலைவர் முதலியவர்களுக்கு அனுப்பியிருக்கிறார்கள். தாலுகா முழுவதும் கே. எஸ். அண்ணங்கார் முதலிய விவசாயி தலைவர்கள் தீவிரப் பிரச்சாரம் செய்துவருகிறார்கள்.

#### உடுமலையில்

உடுமலைத் தாலுகா கணியூர் விவசாய சங்கம் சார்பில் புதிய கல்வித் திட்டத்தை எதிர்த்து நோட்டீஸ்கள் வெளியிடப்பட்டன. நூற்றுக்கணக்கான கண்டன கையெழுத்துக்கள் வாங்கி ராஜாஜிக்கு அனுப்பப்பட்டன.

#### கோவையில்

கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் ஜூன் 25ல் நடைபெற்ற மாபெரும் பொதுகூட்டத்திலும் 26ம் தேதி செல்வபுரத்தில்நடைபெற்ற கூட்டத்திலும் கல்வித் திட்டத்தை யெதிர்த்து தீர்மானங்கள் நிறைவேறின.

#### ஈரோடு

ஈரோடு 17, 18, 19 வார்டு வாலிபர் சங்கம் சார்பில் 28-6-53ல் நடைபெற்ற பொதுக்கூட்டத்திலும் கண்டனத் தீர்மானம் நிறைவேறியது.

#### சேலம்

சேலம் ஜில்லா வாழப்பாடி விவசாயசங்கப் பொதுக்கூட்டத்திலும் வளையசெட்டி பட்டி பாரதி அறிவு மன்றப் பொதுக்கூட்டத்திலும் புதிய கல்வித் திட்டத்தை வாபஸ் வாங்கு! 'என்று தீர்மானம் நிறைவேற்றினார்கள்.

○ ராசிபுரம் தாலுகா புதிய கல்வித்திட்ட எதிர்ப்பு அமைப்புக் குழு நிறுவப்பட்டு தீவிரப் பிரச்சாரம் செய்யப்பட்டு வருகிறது.

#### பொள்ளாச்சி

நகர கம்யூனிஸ்ட் கட்சி, பாக்கிய லெக்ஷிமி மில் தொழிலாளர் சங்கம், ரயில்வே தொழிலாளர் சங்கம், முனிசிபல் தொழிலாளர் சங்கம், சாக்கு தையல் தொழிலாளர் சங்கம், விவசாய சங்கம் முதலியவற்றின் ஆதரவில் 12-7-53ல் நடைபெற்ற மாபெரும் பொதுக் கூட்டம் புதிய கல்வித் திட்டத்தை வாபஸ் வாங்குமாறு தீர்மானம் நிறைவேற்றியது.

#### மன்னார்குடி

கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் 13ம் தேதி நடைபெற்ற மாபெரும் கூட்டத்தில் புதிய கல்வித் திட்டத்தை வன்மையாகக் கண்டித்து தீர்மானம் நிறைவேறியது.

#### கும்பகோணம்

குடந்தை நகர கம்யூனிஸ்ட் கட்சி, புதிய கல்வித் திட்டத்தை கண்டித்து, 1818 கையெழுத்துக்கள் வாங்கி ராஜாஜி திட்டத்துச்கு வேட்டு வைத்திருக்கிறது.

#### பாபநாசம் தாலுகா

தஞ்சை ஜில்லா, பாபநாசம் தாலுகா அம்மாபேட்டையிலும்—அரித்துவாரமங்கலம், கோட்டையூர் முதலிய கிராமங்களிலும், விவசாய சங்கம் சார்பில் பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன. எஸ். ராமலிங்கம் எம்.எல்.ஏ., பி. வெங்கடேசன் எம்.எல்.ஏ., எஸ். வடிவேலு எம்.எல்.ஏ. தாலுகா விவசாய சங்கத் தலைவர்கள் எஸ். வீரையன், வி. ராமசாமி, எஸ். ராமசாமி, என். கோவிந்தசாமி, சத்திய நாராயணன் முதலியவர்கள் புதிய கல்வி திட்டத்தை ஒழிக்கவேண்டுமென்றும் பேசினார்கள். ராஜாஜி திட்டத்தை வாபஸ் வாங்கு! என்று தீர்மானங்கள் ஒவ்வொரு கூட்டத்திலும் நிறைவேறின.

#### மாயூரம் தாலுகா

மாயூரம் தாலுகாவில் மொழையூர், தருமதானபுரம், ஆட்கால் மடபுரம், பட்டவர்த்தி, பொறையார், தேரெழுந்தூர், கீராஊர், பேராவூர் ஆகிய கிராமங்களில் பார்லிமெண்டு மெம்பர் அனந்த நம்பியாரும், பாரதி மோகன், கே.ஆர். வைத்யநாதன், சாரதா, மீனும்பாள் முதலியவர்களும் கூட்டங்களில் புதிய கல்வித் திட்டத்தைக் கண்டித்துப் பேசினார்கள். ஒவ்வொரு கூட்டத்திலும் 8000 பேர், 10,000 பேர் கூடி கண்டன தீர்மானம் நிறைவேற்றினார்கள்.

#### நாகப்பட்டணம்

நாகைத் தாலுகா கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடைபெற்ற ஆயிரக் கணக்கான மக்கள் அடங்கிய கூட்டத்தில் சிவராஜ் M.L.A. மற்றும் பல விவசாயித் தலைவர்கள் பேசினார்கள்.

#### திருச்சியிலே

ராஜாஜியின் திட்டத்தை எதிர்த்து கொடும்பாவி கொளுத்திக் கிளர்ச்சி நடத்துவோமென்றும்—இத்திட்டத்தை உடனே வாபஸ் வாங்க வேண்டுமென்றும் திருச்சியில் 12-7-53ல் நடைபெற்ற சர்வ கட்சி எதிர்ப்பு கூட்டத்தில் தீர்மானித்தார்கள். ராஜாஜியின் திட்டம் ஏழை மக்களை உயர்ந்த பதவிக்கு வாராதபடி தடுச்குமென்றும் ஜாதிப் பூசல்களை வளர்க்குமென்றும்—இது கிராம மக்கள் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை என்றும் கி ஆ பெ. விசுவநாதம், ஜி. சிற்றம்பலம் எம்.எல்.ஏ. பழனியாண்டி எம் எல்.ஏ ,அரவக்குரிச்சி தொகுதி ரத்தினம் எம். எல். ஏ., எம். மாணிக்கசுந்தர முதலியார் எம்.எல்.ஏ., சட்டசபையில் தமிழ்நாடு கம்யூனிஸ்ட் தலைவர் எம். கல்யாணசுந்தரம் எம். எல். ஏ., முதலிய அனைவரும் எதிர்த்தனர் இந்த எதிர்ப்பு மகாநாட்டில் ஜில்லா போர்டு, நகரசபை பஞ்சாயத் போர்டு உறுப்பினர்களும், தொழில், விவசாய சங்க தலைவர்களும் ஏராளமாக வந்திருந்தனர்.

* வன்னிமரத்தடியில் நடைபெற்ற ஆயிரக்கணக்கான மக்களடங்கிய கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக்கூட்டத்தில் புதிய கல்வித் திட்டத்தை வாபஸ் பெறுமாறு தோழர்கள் சக்ரபாணி, ஏ. எஸ். கிருஷ்ணமூர்த்தி, எம். கல்யாணசுந்தரம் MLA முதலியவர்கள் பேசினார்கள். கண்டனத் தீர்மானமும் நிறைவேறியது.

* திருச்சி புத்தூர் மைதானத்தில் 16-7-53ல் தோழர் உமாநாத்ராவ் தலைமையில் நடைபெற்ற சர்வகட்சிப் பொதுக்கூட்டத்திலும் புதிய கல்வித் திட்டத்தை எதிர்த்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

* புதுக்கோட்டை டிவிஷன் கரம்பக்குடி மாதர் ஜனநாயக கழகத்தின் ஆதரவில் 27-6-53ல் நடைபெற்ற கூட்டத்திலும் கண்டிக்கப்பட்டது.

* புகளூர் பஞ்சாயத்து போர்டிலும் எதிர்ப்பு தீர்மானம் நிறைவேறியது.

#### வடார்காடு

* ஆம்பூர் கம்யூனிஸ்ட் கட்சியின் கூட்டத்திலும்,

* கோலார் மாசிகம் கிராம மக்கள் ஜனநாயக சங்கப் பொதுக் கூட்டத்திலுங்

* வேலூரில் செண்பாக்கம் கட்சி சார்பில் நடந்த பொதுக் கூட்டத்திலும் கண்டிக்கப்பட்டது.

#### மதுரை ஜில்லாவில்

* திருமங்கலம் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடந்த மாபெரும் பொதுக்கூட்டத்தில் கண்டனத் தீர்மானம் நிறைவேறியதுடன்—1000 பேர் கையெழுத் திட்டு ராஜாஜியின் திட்டத்தை கண்டித்திருக்கிறார்கள்,

* எரியோடு பிர்க்கா விவசாயிகள் சங்கப் பொதுக் கூட்டத்திலும்,—

* திண்டுக்கல் தோல் பதனிடும் தொழிலாளர் பொதுச் சபை கூட்டத்திலும்,

* கம்பம் விவசாய சங்கம், விவசாய தொழிலாளர் சங்கம், கம்யூனிஸ்ட் கட்சி ஆகியவற்றின் சார்பில் கண்டன ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெறறது.

* சின்னாளப்பட்டி முற்போக்கு வாசகசாலையின் பொதுக்கூட்டத்திலும்,

* திருப்புவனம் கம்யூனிஸ்ட் கட்சி சார்பிலும்,

* மதுரை டவுன் சிங்காரபுர ஐக்கிய முற்போக்கு படிப்பக ஆரம்பவிழா கூட்டத்திலும்,

* பழனி தாலுகா ஒட்டன் சத்திரம் ஜனநாயக வாலிபர் சங்கம் சார்பில் ஜூலை 3ம் தேதியும், 12ம் தேதியும் நடைபெற்ற கூட்டங்களிலும்,

* அரசங்குடி பாரதி மாணவர் கழகப் பொதுக்கூட்டத்திலும் ராஜாஜியின் பிற்போக்கு கல்வித் திட்டம் கண்டிக்கப்பட்டது,

## இன்று ஓட்டுப் பதிவு நாள்!

### ஐக்கிய முன்னணி ஜெயபேரிகை கொட்டட்டும்!

தேர்தல் முடியும் வரையிலும் உற்சாகம் குன்றாமல் உஷார் உணர்வுடன், முழுமூச்சுடன் வேலை செய்யுங்கள்!

தொழிலாளர்களே!
விவசாயிகளே!
நெசவாளர்களே!
வியாபாரிகளே!
தாய்மார்களே!

துப்பாக்கி ஆட்சிக்கு சாவுமணி அடிக்க, இன்பமும் செழிப்பும் மிக்க சமுதாயத்தை உருவாக்க, கதிர் அரிவாள் பெட்டியில் எஸ். உலகநாதனுக்கே உங்கள் வாக்குகளை அளியுங்கள்.

19—7—53.

விருதுநகர் தொகுதி வாக்காளர்களே!

உங்களது ஓட்டுகளைப் பறிக்க காங்கிரஸ் பணத்தை வாரி இறைக்கிறது. காங்கிரஸ் ஏடுகள் பொய் மாரி பொழிகின்றன.

உங்கள் பதில் என்ன? மாட்டுப்பெட்டி மண் கவ்வ—கதிர் அரிவாள் பெட்டியில் வாக்குகளை குவியுங்கள்!

தோழர்களே! கையில் காசில்லாமல், அரைப் பட்டினியுடன் நீங்கள் பாடுபடுகிறீர்கள். நீங்கள்

### உங்கள் ஓட்டு எஸ். உலகநாதனுக்கே!

கண்ணன தமிழகத்தைவிட்டு வயிற்றுப் பிழைப்புக்காகப் பம்பாய் மில்களிலே பாடுபட்டு வரும் தமிழ்நாட்டுத் தொழிலாளர்களின் ஜனநாயக வாலிபர் சங்கம், 'இன்பம் தவழும் ஐக்கிய தமிழகத்துக்காகப் போராடும் ஐக்கிய முன்னணிக்கு ஓட்டுப் போடுமாறு விருதுநகர் தொகுதி மக்களுக்கு வேண்டுகோள் விடுத்திருக்கிறது.

## தி. மு. க., தி. க. தலைவர்களை விடுதலை செய்யக் கிளர்ச்சி

12-7-53ல் விருதுநகரில் ஐக்கிய முன்னணி சார்பாக நடைபெற்ற தேர்தல் பொதுக் கூட்டத்தில் ஆசைத் தம்பி உட்பட 57 பேரைக் கைது செய்ததைக் கண்டித்தும் அவர்களை விடுதலை செய்யவேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

கூட்டத்தில் மதுரை கே. பி. ஜானகி, பரிபேக் மரியப்பா முதலியோர் பேசினர்.

#### பொள்ளாச்சி

12-7-53ல் பொள்ளாச்சி நகர கம்யூனிஸ்ட் கட்சி, பாக்யலக்ஷ்மி மில்தொழிலாளர் சங்கம் நகரசுத்தித் தொழிலாளர் சங்கம்,ரயில்வே தொழிலாளர் சங்கம், ஐக்கிய ஓட்டல் தொழிலாளர் சங்கம், மாக்கினாம்பட்டி விவசாயிகள் சங்கம், சாக்குத் தொழிலாளர் சங்கம் ஆகியவற்றின் சார்பில் புதிய கல்வித் திட்டத்தை எதிர்த்து ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடைபெற்றது.

கூட்டத்திற்கு ஆர் ராமலிங்கம் தலைமை வகித்தார். தோழர்கள் வி. ரங்கசாமி, கோபாலகிருஷ்ணன் சி ப. கந்தசாமி ஆகியோர் பேசினர்.

#### மன்னார்குடி

கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் 13-7-53ல் புதிய கல்வித் திட்டத்தையும், உணவுக் கொள்கையையும் எதிர்த்து மன்னார்குடியில் தோழர் சி. காசிநாதன் தலைமையில் ஊர்வலமும், பொதுக் கூட்டமும் நடைபெற்றது.

தோழர்கள் கே பி. நடராஜன், ஆர். தங்கராஜ் முதலியோர் பேசினர்

#### சத்திரப்பட்டி

இங்குள்ள கைத்தறி நெசவுத் தொழிலாளர் சம்மேளனம், கம்யூனிஸ்ட் கட்சி, இளங்கோ நாடக மன்றம் இவைகளின் சார்பில் தோழர் சண்முகவேல் தலைமையில் 12-7-53ல் புதிய கல்வித் திட்ட எதிர்ப்பு தினம் கொண்டாடப்பட்டது.

#### சத்திரப்பட்டியில்

ராஜபாளையம் சத்திரப்பட்டி கைநெசவுத் தொழிலாளர் சங்கம், கம்யூனிஸ்ட் கட்சி, இளங்கோ நாடக மன்றம் ஆகியவற்றின் சார்பிலும்,

○ கே. ஆனைப்பட்டி விவசாய சங்கக் கூட்டத்திலும்,

○ விருதுநகர் ஐக்கிய முன்னணி சார்பில் நடைபெற்ற கூட்டங்களிலும் புதியகல்வித் திட்டம் கண்டிக்கப்பட்டது.

#### சிவகிரியில்

○ சிவகிரி ஏரியா அழகாபுரியிலும், ஜூலை 1, 13 தேதிகளில் கம்யூனிஸ்ட் ஆதரவில் நடைபெற்ற கூட்டங்களிலும் புதிய கல்வித் திட்டத்தை வாபஸ் வாங்குமாறு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

#### பம்பாய் தமிழர்கள்

வருங்கால தலைமுறையை வளர விடாதபடி முளையிலேயே கிள்ளியெறியும் ராஜாஜியின் கல்வித் திட்டத்தைக் கண்டு பம்பாய் தமிழர்களும் மனம் கொதிக்கிறார்கள். பம்பாம் தாராவி ஜனநாயக வாலிபர் சங்க கூட்டத்தில் கடுமையாக கண்டிக்கப்பட்டது.

#### சென்னை நகரில்

சென்னைநகர் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆதரவில் 15-7-53ல் நடைபெற்ற மாபெருப் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் ஜான், கே. டி. கே தங்கமணி, கார்ப்பரேஷன் கவுன்சிலர் கன்னியப்பன், கே டி. ராஜு எம். எல். ஏ., ரத்தினம் எம். எல். ஏ., கே. முருகேசன் முதலியவர்கள் புதிய கல்வி திட்டத்தை வாபஸ்பெறுமாறு பேசினார்கள். கண்டன தீர்மானமும் நிறைவேறியது.

○ சென்னை ஆள்வார்பேட்டை, மக்கள் முன்னேற்ற மன்றக் கூட்டத்திலும் கண்டிக்கப்பட்டது.

○ திருவொற்றியூரில் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பாக நடைபெற்ற கூட்டத்தில் எஸ். ராமகிருஷ்ணன், மாயாண்டிபாரதி முதலியவர்கள் ராஜாஜின்யின் கல்வித் திட்டத்தைக் கடுமையாகக் கண்டித்தார்கள். கண்டன தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

*Regd. No. M.* 5934

Edited, Printed & Published by G. ALAVANDAR, at Janasakthi Press, Subodhaya Buildings, 38, Mount Road, Madras-6.
OFFICE: 3. Anthony Street, Madras-14.